தமிழ் மன்னன்

# கோனேரிராயன்

குடவாயில் பாலசுப்பிரமணியன்







6-4

தமிழ் மன்னன்

# கோனேரிராயன்




குடவாயில் பாலசுப்பிரமணியன் எம்.ஏ., எம்.ஃபில்.,

**அஞ்சனா பதிப்பகம்**

6, நிர்மலா நகர் - வல்லம் சாலை

தஞ்சாவூர் - 613 007

தமிழ் மன்னன் கோனேரி ராயன்
முதற் பதிப்பு ஏப்ரல் 2001

உரிமை : ஆசிரியருக்கே
ஆசிரியர் : குடவாயில் பால சுப்பிரமணியன்
பக்கங்கள் : 4 + 103 (படங்களுடன்)
நூல் அளவு : 1/8
தாள் : 13.7 கிரிமோ

வெளியீடு :
**அஞ்சனா பதிப்பகம்**
6, நிர்மலா நகர் - வல்லம் சாலை
தஞ்சாவூர் - *613 007*

அச்சிட்டோர் :
**ஜெமினி ஆப்செட் பிரிண்டர்ஸ்**
தஞ்சாவூர் - *613 005*

விலை : ரூ 50/-

6-4

# முன்னுரை

வைத்தியநாத காளிங்கராயன் எனும் கோனேரிராயன் கி.பி.15 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தொண்டைமண்டலம் சோழ மண்டலம் உள்ளிட்ட தமிழகத்தின் பெரும் பகுதியின் மன்னனாக விளங்கியவன். விஜய நகர அரசர்களைப் பேரரசர்களாக ஏற்க மறுத்துத் தனியாட்சி நிறுவியவன். அவனது வரலாறு இதுவரை எழுதப்படாமலேயே இருந்தது. கோனேரிராயன் எனப் பெயர் பொறிக்கப்பெற்ற காசுகள், கல்வெட்டுக்கள் துணை கொண்டு அவனது வரலாற்றை இச் சிறு நூலாக எழுதினேன்.

இந்நூல் வெளிவருவதற்குத் தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி இயக்ககம் நிதி உதவி நல்கியது. அத்துறையினர்க்கும், எனக்குத் துணைநின்ற சான்றோர்களான அமரர் கு.சிவஞானம், முனைவர் இரா.நாகசாமி ஆகியோர்க்கும், என் நண்பர்களான பேராசிரியர் இல. தியாகராஜன், ஸ்ரீரங்கம் ஸ்ரீதரன், முனைவர் இராசு. பவுன்துரை, முனைவர் ஜம்புலிங்கம் ய.மணிகண்டன், க. மனோகரன், ம. சரபோஜி, திருமதி சுபாஷினி, ஆகியவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கோனேரிராயன் காசுகளின் ஒளிப்படம் தந்துதவிய அளக்குடி சீதாராமன் அவர்களுக்கும், நல்ல நூலாக அச்சிட்டுத் தந்த இரா. சுரேஷ் அவர்களுக்கும் நன்றிக் கடப்பாடுடையேன் ஆவேன்.

குடவாயில் பாலசுப்பிரமணியன்

தஞ்சாவூர்
25-01-2001.

# உள்ளுறை

6-4

# கோனேரிராயன் - அறிமுகம்

தமிழகத்தைப் பொறுத்தவரை எத்தனையோ மன்னர்கள், எத்தனையோ மரபினர் ஆண்டு சென்றுள்ளனர். இம்மன்னர்களின் பட்டியலில் சிலர்தாம் தாங்கள் ஆட்சிபுரிந்தது சில ஆண்டுகளே யெனினும், தங்களது சாதனைகளால், வீரத்தால் அழியாத வரலாற்று முத்திரைகளை விட்டுச் சென்றுள்ளனர். அவ்வாறு கிடைத்த சில தடயங்களே இன்று நாம் அப்புகழாளர்களின் முழுவரலாறும் அறியத் துணைபுரிகின்றன.

காசுகள் கூட ஒருநாட்டின் வரலாற்றைக் கூறும் அரும்பொருளாக அமைவதுண்டு. தமிழகத்தின் ஈராயிரம் ஆண்டு வரலாற்றைப் புரட்டும் போது பலநூற்றுக் கணக்கான மன்னர்கள் ஆண்டுள்ளனர். அவர்கள் வெளியிட்ட காசுகள் பல இன்று நமக்குக் கிடைத்துள்ளன. ஆனால் தொன்நெடுங்காலம் முதல் இன்றுவரை புழக்கத்திலிருந்த காசுகளின் வரிசையில் தமிழ் எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட காசுகள் விரல் விட்டு எண்ணக்கூடிய ஒரு சிலவே என்பது வியப்பளிக்கின்றது.

தமிழின் பால் மிகவும் பற்றுடன் திகழ்ந்த சோழப் பெருமன்னர்கள் கூட தாம் வெளியிட்ட காசுகளில் தமிழைவிட வடவெழுத்துக்களுக்கே சிறப்புக் கொடுத்திருந்தனர். தென் இந்தியாவில் இதுவரை கிடைத்துள்ள பலநூறு காசுகளை வகைப்படுத்தி இனம் கண்டு கொண்ட திவான் பகதூர் தேசிகாச்சாரி அவர்கள் தம் " SOUTH INDIAN COINS " எனும் ஆய்வுநூலில் "கோனேரிராயன்" என்ற தமிழ் எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட காசு களை வரலாற்றுலகுக்கு பாண்டியர் காசுகளாக அறிமுகம் செய்தார். பின்னர் காசியிலுள்ள நாணய இயல் ஆய்வுக் கழகம் வெளியிட்டுள்ள COINS OF PANDIAS எனும் நூலிலும் இக் காசுகள் பற்றி குறிக்கப் பெற்றுள்ளது. ஆனால் இவ்வகைக் காசுகளை முதன் முதல் வரலாற்றுலகுக்கு அறிமுகம் செய்தவர் சர் வால்டர் எலியட் என்ற மேனாட்டு அறிஞரே. இவர் தம் COINS OF SOUTHERN INDIA எனும் நூலில் " கோனேரிராயன் " யார் என்று அறிய இயலவில்லை எனக் குறிப்பிட்டுள்ளார்.

ஆனால் திரு தேசிகாச்சாரி, பிடலப் போன்ற அறிஞர்கள் " கோனேரிராயன் " எனும் காசுகள் பாண்டியர்களுடையது என்று கூறுவது ஏற்புடையதாக இல்லை. அவர்கள் கருத்துப்படி இவை 12 - 13 ஆம் நூற்றாண்டு எழுத்தமைதி உடைய காசுகளாக

அமையாமல் 15 ஆம் நூற்றாண்டுக்குரிய எழுத்தமைதியில் காணப்பெறுகின்றன. மேலும் கோனேரிராயன் என்ற பெயரில் எந்த ஒரு பாண்டிய மன்னனும் அரசோச்சியதாக வரலாறும் இல்லை.

15 ஆம் நூற்றாண்டு எழுத்தமைதி என்பதனையே எனது ஆய்வுக்குத் தளமாக அமைத்துக் கொண்டு இக்காசுகளை வெளியிட்ட மன்னன் "கோனேரிராயன்" யார் ? அவன் எப்போது தமிழகத்தை ஆட்சிசெய்தான் ? போன்ற வினாக்களுக்கு விடை தேட முயன்றேன். கல்வெட்டுச் சாசனங்கள், வரலாற்று பேரறிஞர்களின் ஆய்வுக் கருத்துக்கள் போன்றவற்றை ஆராய முனைந்த போது மேலும் சில புதிய தடங்கள் கிடைத்தன.

தமிழக வரலாற்று நூல்களும், சென்னை மற்றும் அண்ணாமலைப் பல்கலைக் கழகங்களின் ஆய்வேடுகளும், மத்திய தொல்லியல் துறையினரின் கல்வெட்டு அறிக்கைகளும் இம் மன்னனது கல்வெட்டுக்களாகக் கிடைத்த ஏழு சாசனங்களை மட்டுமே ஆய்வுசெய்து விட்டு, ' கோனேரிராயன் ' என்பான் கி.பி 15 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் திருச்சிராப்பள்ளியில் திகழ்ந்த ஒரு முரட்டுத் தலைவன் என்றும், வைணவர்களுக்குத் தீங்கிழைத்த கொடுமையாளன் என்றும் விவரிக்கின்றன.

இவனை ஒரு மன்னன் என்றோ, சமயப் பொறையுடன் திகழ்ந்தவன் என்பதையோ, இவனுக்கும் "கோனேரிராயன்" காசுகளுக்கும் உள்ள தொடர்பு பற்றியோ அந்நூல்களில் குறிப்பிடப்படவில்லை.

இதுவரை ஆய்வு அறிஞர்கள் கண்ட ஏழு கல்வெட்டுச் சாசனங்கள், தேசிகாச்சாரியார் குறிப்பிட்ட காசுகள், திருவரங்கம் வரலாறு கூறும் கோயிலொழுகின் மேம்போக்கான செய்திகள் ஆகியவைமட்டுமே, கோனேரிராயனைப் பற்றி அறிய உதவின. ஆனால், இந்நூலாசிரியர் சேகரித்த 20க்கும் மேற்பட்ட கல்வெட்டுச் செய்திகள், 'கோனேரிராயன்' பெயர் பொறித்த வேறு வகையான காசுகள், திருவரங்கம் திருக்கோயிலில் உள்ள சிற்பங்கள், திருவரங்கத்துக் கோயிலொழுகின் ஆழமான பார்வை, திருவோத்தூர் கோயில் சிற்பங்கள் ஆகிய அனைத்தையும் ஒருங்கே தொகுப்பாய்வு செய்து, கி.பி. 1471 ஆம் ஆண்டு முதல் கி.பி. 1496 வரை காஞ்சிபுரம், தஞ்சை, திருச்சிராப்பள்ளி உள்ளிட்ட சோழமண்டலத்தையும், தொண்டை மண்டலத்தையும், சிறப்புடன் ஆட்சி செய்த மன்னவனாம் கோனேரிராயனின் முழு வரலாறும் இங்கு தொகுக்கப்பட்டு வழங்கப் பெறுகின்றது.

மாற்றானுக்குப் பணியாத பண்புடன் திகழ்ந்த இம்மன்னவன் தான் பிறந்து வாழ்ந்த தமிழ் மண்ணை மிகவும் நேசித்தான். தமிழ்ப் பொறித்த காசுகள் இவனது நாட்டின் செல்வச் செழுமையைப் பேசின. சைவமும் வைணவமும் தன்னிரு கண்களெனப் போற்றினான். வடவேங்கடத்து திருமலைக் கோயில் கூட, இவனது தமிழ்க் கல்வெட்டொன்றைத் தாங்கி நின்று இவன் புகழ் பாடுவது பெருமையிலும் பெருமையல்லவா !

கி.பி 15 ஆம் நூற்றாண்டில் திருமலைதேவ மகாராயனுக்குப் பின்பு விஜய நகர அரசின் கீழ் செயல்பட்ட தமிழகத்தின் வரலாறு இதுவரை விளக்கமுற எழுதப்பெறவில்லை, அதிலும் சிறப்பாகச் சோழ மண்டலத்தின் வரலாறு தெளிவு இல்லாமலேயே இருந்தது. அப்பகுதியை ஒளிபெறச் செய்யும் ஒரு குத்துவிளக்காகவே " கோனேரிராயன் " இங்கு உங்களுக்கு அறிமுகம் ஆகிறான். அவன் சிவிகையில் உலாவரும் கண் கொள்ளாக் காட்சியைக் கூட காணப்போகிறீர்கள். அவனை மட்டுமா? அவனது தேவியர்கள்...! சேனைகள்...! அவன்செய்த பெரும்போர் அத்தனையும் தான்...!

கோனேரிராயனின் தமிழ்க் காசு





# " கோனேரிராயன் " - வரலாறு

## (சுருக்கம்)

கி.பி 1471 - கர ஆண்டில் சோழமண்டலத்தின் விஜயநகரப் பேரரசின் மண்டலேசுவரனாகத் திகழ்ந்த திருமலைய்ய தேவனின் ஆட்சி முடிவுற்றதும், கோனேரிராயன் இம்மண்டலத்தின் மண்டலேசுவரனாகப் பொறுப்பேற்றான். கி.பி 1485 வரை விஜய நகரப் பேரரசுக்கு உட்பட்ட மண்டலேசுவரனாகவே திகழ்ந்த கோனேரி ராயன் விஜயநகரப் பேரரசில் சங்கமகுலம் வீழ்ந்து சாளுவ குலம் உதயமானதை ஏற்க மனமின்றி தமிழகத்தில், குறிப்பாகச் சோழ, தொண்டை மண்டலங்களின் மன்னனாகத் (விஜயநகர அரசுக்கு கட்டுப்படாத) தனி ஆட்சியை நிறுவினான்.

இவனது இயற்பெயர் வைத்தியநாத காளிங்கராயன் என்பதாகும். ஸ்ரீமன் மகாமண்டலேசுவரன், பட்டுக் கட்டாரி, இராய பசவ சங்கரன், மதியாத மன்னர் மணவாளன், காஞ்சிபுர வரதீசுவரன், கோனேரிதேவ மஹாஇராசர் என்ற விருதுப்பெயர்களோடு இவனது கல்வெட்டுக்கள் காணப் பெறுகின்றன.

இம்மன்னவன் வெளியிட்ட காசுகளில் " கோனேரிராயன் " என்ற தமிழ் எழுத்துப் பொறிப்புகளும், எருதுடன் உடைவாள் கொண்ட சின்னமும், சில வகைக்காசுகளில் கட்டாரி (கோடரி) வடிவமும் காணப்பெறுகின்றன. திருச்சி மாவட்டம் திருமழபாடி கோயிலில் " கோனேரிராயன் திருமண்டபம் " என்ற மண்டபமும் " கோனேரிராயன் பண்டாரமும் " இருந்த செய்திகள் அத்திருக்கோயில் கல்வெட்டுக்களின் வாயிலாக அறிய முடிகிறது. வட ஆர்க்காடு மாவட்டம் திருவோத்தூர் திருக்கோயிலில் இம்மன்னவன் தன் பரிவாரங்களோடு பல்லக்கில் பவனி வரும் காட்சி புடைப்புச் சிற்பமாக, " கோனேரிராயன் " என்ற கல்வெட்டுக் குறிப்போடு காட்சி நல்குகின்றது.

இவனது அரசு ஆணைகளாகப் பொறிக்கப் பெற்ற கல்வெட்டுக்கள் தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, தென் ஆர்க்காடு, வட ஆர்க்காடு ஆகிய மாவட்டங்களிலும் திருப்பதி திருமலையிலும் இன்றும் உள்ளன. சைவம், வைணவம் ஆகிய சமயக் கோட்பாடுகளில் மிகுந்த ஈடுபாட்டுடன் திகழ்ந்த கோனேரிராயன் பல ஆலயங்களுக்குத் திருப்பணிகள் செய்து மிகுந்த ஆக்கமும் தந்தான். சைவ சமயக் குரவர்கள் மீது பற்றும் திருஞான சம்பந்தரின் தேவாரம், சேக்கிழாரின் பெரியபுராணம் ஆகியவற்றில் ஈடுபாடும்

கொண்டவன் என்பது அவன்து கோயில் திருப்பணிகளாலும், கல்வெட்டுச் செய்திகளாலும், புலனாகின்றன.

" கோனேரி " - என்பது திருமலை வேங்கடவனின் திருநாமமாகும். அப்பெயரை தனது சிறப்புப் பெயராகச் சூடிய இம்மன்னவன் திருமலை திருக்கோயிலுக்கும், திருவரங்கப் பதிக்கும் எண்ணிலா கொடைகள் நல்கியவன். இவனை வைணவத்திற்குத் தீங்கிழைத்தவனாக வரலாற்று ஆசிரியர்கள் கருதினர். ஆனால் இவனது வரலாற்றை ஆழமாக ஆராயும் போது இவன் ஓர் நல்வைணவனாகவே காட்சி அளிக்கின்றான். இவனது ஆட்சிக்காலத்தில் திருவரங்கம் திருக்கோயிலில் சில குழப்பங்கள் நிகழ்ந்தன. இதற்குக் காரணம் அரசியல் பின்னணியே என்பது தெளிவாகின்றது.

வரதாம்பிகா பரிணய சம்பு, அச்சுதராயாபுதயம், பாரிஜாதபஹரணம் போன்ற வடமொழி, தெலுங்கு நூல்கள் இவனது வீரத்தை விரிவாகப் பேசுகின்றன. கி.பி 1496ல் திருச்சிராப்பள்ளியில் விஜயநகரப் பேரரசின் தளபதி நரசநாயக்கனுடன் நிகழ்த்திய போரில் தோல்வியுற்றதால் இவனது ஆட்சி முடிவு எய்தியது. இவனுக்குப் பின்பு இவனது மகன் காளத்திப் பகுதிக்கு அரசனாய்த் திகழ்ந்தான் என்பதைத் திருவரங்கம் கல்வெட்டு கூறுகின்றது.

திருச்சிராப்ட:ள்ளியைத் தலைமையிடமாகக் கொண்டு சோழ மண்டலத்தையும், தொண்டை நாட்டையும் ஆட்சி புரிந்தான். கோனேரிராயன் எனும் இம்மன்னவன் பெயரால் பல ஊர்களுக்கும், இடங்களுக்கும் பெயர்கள் ஏற்பட்டன. அவை இன்றளவும் மக்கள் வழக்கில் உள்ளன. கி.பி 15 ஆம் நூற்றாண்டில் இருபத்தைந்து ஆண்டுகள் தனித்தன்மையுடன், தன்மான உணர்வுடன், மாற்றானுக்கு அடிபணியாமல் அரசோச்சி வாழ்ந்த இத்தமிழ் மன்னனின் வரலாறு, தமிழக வரலாற்றில் இந்நூல் மூலம் ஒளி பெறுகின்றது. அதனை விரிவாகப் பின்வரும் பகுதிகளில் காண்போம்.

# 15 ஆம் நூற்றாண்டில் விஜய நகரப் பேரரசு

பல்லவர்கள், சோழர்கள், பாண்டியர்களின் மறைவிற்குப்பின்பு தமிழகத்தின் பெரும் பகுதி விஜய நகரப் பேரரசின் ஆதிக்கத்தின் கீழ் வந்தது. கோனேரிராயனின் வரலாற்றை ஆராய முற்படுமுன் பதினைந்தாம் நூற்றாண்டில் விஜயநகரப் பேரரசு எவ்வாறு திகழ்ந்தது என்பதை அறிவது இன்றியமையாத ஒன்றாகும்.

சங்கமகுலத்தைச் சேர்ந்த முதலாம் ஹரிஹரன் (கி.பி 1336 - 1357) இப்பேரரசைத் தோற்றுவித்தான். இதன்பின்பு முதலாம் புக்கன் (கி.பி 1344 - 1377), இரண்டாம் ஹரிஹரன் (கி.பி 1377 - 1404), முதலாம் தேவராயர் (கி.பி 1406 -1422), இரண்டாம் தேவராயர் (கி.பி 1422 - 1446) ஆகியோர் பட்ட மேற்றனர்.

இரண்டாம் தேவராயனுக்குப் பிறகு கி.பி 1447 ல் பட்டமேற்ற மல்லிகார் ஜுனன் வலிமையற்றுத் திகழ்ந்தான். இவனது ஆட்சியின் போது இரண்டாம் அலாவுதீனும், ஒரிசா நாட்டு மன்னன் கபிலேஸ்வர கணபதியும் விஜயநகரின் மீது படை எடுத்தனர். பின்பு கபிலேஸ்வரன் கி.பி 1454 க்குள் இராஜ மகேந்திரவரத்தையும் கொண்டவீட்டையும் கைப்பற்றிக் கொண்டான். ஸ்ரீசைலம் வரையிலும் உள்ள பகுதிகளை வென்றான். தமிழகப் பகுதிகளான காஞ்சிபுரத்தையும், திருச்சிராப் பள்ளியையும் கி.பி 1463 ல் வென்றான். தென்தமிழகம் வரை கபிலேஸ்வர கணபதி வென்றானேயொழிய அவனால் நீடித்து இப்பகுதியைத் தன் ஆதிக்கத்துக்குள் வைத்துக் கொள்ள முடியவில்லை. இதற்குக் காரணம் விஜய நகரப் பேரரசின் கீழ் பல மண்டலேஸ்வரர்கள் அவ்வப் பகுதிகளைத் தன்னாட்சி செய்து வந்ததுதான். அவர்களது வலிமையும், திறமையும் மல்லிகார்ஜுனனை நிலை பெறச் செய்தது.

அத்தகைய மண்டலீகர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் சாளுவ திருமலைதேவ மகாராயனும், சாளுவ நரசிம்மனும் ஆவர். திருச்சி, தஞ்சை, புதுக்கோட்டைப் பகுதிகளை திருமலை தேவமகாராயனும், விஜய நகரப் பேரரசின் மையப் பகுதி மற்றும் கிழக்குப் பகுதிகளைச் சாளுவ நரசிம்மனும் திறம்பட, தம் ஆதிக்கத்தின் கீழ் வைத்திருந்தனர்.

மல்லிகார்ஜுனன் கி.பி 1465 ல் ஜூன் மற்றும் அக்டோபர் மாதங்களுக் கிடையில் இறந்துபோயினான். அவனுடைய மகன் குழந்தையாய் இருந்தமையால், பிரதாப தேவராயனுடைய மகன்

இரண்டாம் விருபாட்சன், கி.பி 1465 ல் விஜய நகரப் பேரரசனானான். விருபாட்சன் விஜயநகர அரியணை ஏறுவதற்கு முன் பல ஆண்டுகள் பெனுகொண்டாவின் ஆட்சியாளனாய்த் திகழ்ந்தவன். அவன் தீயொழுக்கம் உடையவன் என்றும், மது மயக்கத்திலும் மாதர்மையலிலும் எப்போதும் ஆழ்ந்து கிடந்தான் என்றும் *நூனிஸ்* குறித்துள்ளார்.

இஸ்லாமியர்களின் படை எடுப்பால் பேரரசு பாதிக்கப் பட்டாலும் சந்திர கிரிராஜ்யத்தின் ஆட்சியாளனான சாளுவ நரசிம்மனும், அவனது துணைவன் *துளுவ தளபதி ஈஸ்வர நாயக்கனும்* விஜய நகர அரசின் பேரபாயங்களைத் தவிர்த்துக் காத்தனர். காஞ்சிபுரத்தைத் திடீரென்று தாக்கி, அங்கு கிடைத்த ஏராளமான பொருள்களுடன் மீண்டு கொண்டிருந்த பாமினி சுல்தானை வழிமறித்து அந்தப் பொருள்களை மீட்ட பெருஞ்சிறப்பு துளுவ தளபதி ஈஸ்வரனையேச் சாரும். இந்நிகழ்ச்சி மிகவும் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சியாகும்.

இரண்டாம் விருபாட்சன் கி.பி 1485 வரை ஆட்சி புரிந்தான். இவ்வாண்டில் அவனது மூத்த மகன், விருபாட்சனைக் கொன்று விட்டு, தான் அரியணை ஏறாமல், தன்தம்பி ' படியராவ் ' (பிரவுட தேவராயன் II) என்பவனுக்கு முடிசூட்டி விஜயநகரப் பேரர சனாக்கினான். பிரவுட தேவராயனோ தான் அரியணை ஏறியதும் முதலாவதாகத் தனக்கு முடிசூட்டிய தன் தமையனையே கொலை செய்தான். இவனுக்கு மதுபானங்களிலும், மாதர்மையலிலுமே நாட்டம் மிகுந்திருந்ததால் அரசியலைக் கவனியாமல் இருந்தான். இவனது திறமைக் குறைவும், தீயொழுக்கங்களும் சங்கம குலத்திற்கு முற்றுப்புள்ளி வைத்தன.

விஜய நகரப் பேரரசைக் காக்க வேண்டுமாயின் சங்கமகுலத்தை அழித்துவிட்டுத் தானே அரியணை ஏறுவதைத் தவிர வேறுவழியில்லை என்பதை நன்குணர்ந்த சாளுவ நரசிம்மன் (மகா மண்டலேசுவரனாகப் பொறுப்பேற்றவன்) தன் தளபதியான நரசநாயக்கனிடம் விஜயநகரின் மீது படை எடுத்து அதனைக் கைப் பற்றுமாறு உத்தரவிட்டான்.

இந்தப் படை எடுப்பைப் பற்றி நூனிஸ் பின்வருமாறு குறிப்பிடுகிறார். " நரசிம்மனின் தளபதியான நரச நாயக்கன் விஜய நகரின் வாயிலை அடைந்த போது அவனை எதிர்ப்பதற்கு அங்கு யாருமே இல்லை. பின்னர் அவன் அரச மாளிகைக்குள் நுழைந்தான். அங்கும் அவனை யாரும் தடுக்கவில்லை. அதன்பின் அவன் அரசனுடைய அந்தப்புரத்திற்குச் சென்று பெண்கள் சிலரையும்

கொன்றான். அப்போதும் அவனை ஒருவரும் எதிர்க்கவில்லை. இறுதியில் அரசன் என்ற பெயரில் இருந்த கோழையும் ஓடி விட்டான். அதன் பின் சாளுவ நரசிம்மன் (கி.பி 1486 ல்) அரச பதவிக்கு உயர்த்தப் பட்டான் " - என்று குறிப்பிடுகிறார்.

இவ்வாறு நரசநாயக்கனின் துணையுடன் விஜய நகரப் பேரரசின் சாளுவ குலவம்சம் கி.பி 1486 ல் உதயமாயிற்று. சாளுவ நரசிம்மன் அரியணை ஏறியது பல குறு நில மன்னர்களுக்கும், (மண்டலேசுவரர்கள்) பாளையக்காரர்களுக்கும் பிடிக்காமல் போகவே ஆங்காங்கே குழப்பங்கள் நிகழ்ந்தன. இக்காலத்தில் தான் தமிழகத்தில் பாண்டிய நாட்டில் விஜய நகர ஆட்சி நிலை பெற்றது.

கி.பி 1491 ல் சாளுவ நரசிம்மன் இறப்பதற்கு முன்னர், தன் இரு மகன்களையும் தன்னிடம் மிகுந்த பற்றுடனும், உண்மை யுடனும் திகழ்ந்த துளுவ நரச நாயக்கனிடத்தில் ஒப்படைத்தான். சாளுவ நரசிம்மனின் மறைவிற்குப் பின்பு நரச நாயக்கன் அரச குமாரர்களுள் மூத்தவனாகிய திம்மபூபனை அரியணை ஏற்றினான். ஆனால் நரச நாயக்கனுக்குப் போட்டியாய்த் திகழ்ந்த தளபதி திம்மராசன் என்பவன் திம்மபூபனை சூழ்ச்சியால் கொன்றான். அதனால் இளையவன் இம்மடி நரசிம்மன் கி.பி 1491 ல் அரசனானான். ஆனால் அரசியல் அதிகாரம் முழுவதையும் நரசநாயக்கன் தன்னிடமே வைத்துக் கொண்டான்.

இம்மடி நரசிம்மன் பெயரளவில் அரச பீடத்தில் இருந்தாலும், நரசநாயக்கன் தன்னை விஜயநகரப் பேரரசனாகவே கருதிக் கொண்டு சாளுவ அரச மரபுக்குரிய பட்டப் பெயர்களையும் சூடிக் கொண்டான். பின்னர் இம்மடி நரசிம்மனுக்கும், நரசநாயக்கனுக்கும் கருத்து வேறுபாடு அதிகரித்தது. இதன் பயனாக இம்மடி நரசிம்மனை நரசநாயக்கன் பெனு கொண்டாவிற்குக் கொண்டு சென்று கடுமையான கண்காணிப்பில் வைத்தான். இந்நிகழ்ச்சியால் நரசனின் அதிகார பலம் அதிகரித்த தாயினும், அதுவே பேரரசின் கீழ் இருந்த பல குறுநில வேந்தர்களின் எதிர்ப்பைக் கடுமையாக வளரச் செய்தது.

குறிப்பாகத் தமிழகத்தில் நரசசாயக்கனுக்கு எதிர்ப்பு அதிகமாக இருந்தது. இங்கு மண்டலீகர்களாய்த் திகழ்ந்த கோனேரிராயன், சமரகோலாகலன் எனும் மாவலி வாணாதிராயன் போன்றவர்களின் எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டியதாயிற்று. கி.பி 1496 ல் நரச நாயக் கனின் தென்னாட்டு " திக் விஜயத்தால் " தமிழகத்தின் ஆட்சியில் சில மாற்றங்கள் ஏற்பட்டன.

நரச நாயக்கனின் மறைவிற்குப் பிறகு விஜய நகரப் பேரரசின்

மாமன்னனாக வீர நரசிம்மன் முடி சூட்டிக் கொண்டான். இதனால் விஜய நகரப் பேரரசில் " துளுவ குலம்" உதயமாயிற்று. கி.பி 1505 ல் தோற்றுவிக்கப் பெற்ற துளுவகுல அரசு கி.பி 1509 ல் நரசநாயக்கனின் மற்றொரு மகனான கிருஷ்ண தேவராயர் முடிசூடப்பெற்றதும் மேலும் மெருகேறிச் சுடர்விட்டு ஒளிர்ந்தது.

15 ஆம் நூற்றாண்டின் மத்திய காலத்திலிருந்து அந்நூற்றாண்டு இறுதிவரை திகழ்ந்த சங்கம குல மன்னர்களான மல்லிகார்ஜுனன், இரண்டாம் விருபாட்சன், பிரவுட தேவராயன் போன்றவர்களது வரலாற்றையும், மண்டலேசுவரனாய்த் திகழ்ந்து பின்பு சாளுவ குலப் பேரரசனான நரசிம்மன், அவனது தளபதி நரசநாயக்கன் ; சோழநாட்டு மண்டலேசுவரன் திருமலை தேவராயன் போன்றவர்களின் வரலாற்றையும் முழுவதுமாக அறிந்து கொண்டால் தான், இதே கால கட்டத்தில் தமிழகத்தின் பெரும் பகுதியை (தொண்டை மண்டலம் மற்றும் சோழமண்டலம்) ஆட்சி புரிந்த நம் கோனேரிதேவ மகாராயனின் வரலாற்றை முழுவதுமாக அறிய இயலும்.

# 15 ஆம் நூற்றாண்டில் தமிழகம்

கி.பி 14 ஆம் நூற்றாண்டில் தமிழகம் விஜயநகரப் பேரரசின் ஆதிக்கத்திற்குட்படலாயிற்று. இதனால் இப்பேரரசின் நிர்வா கிகளான மண்டலேசுவரர்களும், மகா மண்டலேசுவரர்களும் அவ்வப் பகுதிகளுக்கு தலைவர்களாய்த் திகழ்ந்து ஆட்சி புரிய லாயினர். இதுவே 15 ஆம் நூற்றாண்டிலும் தொடர்ந்தது. பின்னர் 16 ஆம் நூற்றாண்டில் இதே பேரரசின் ஆட்சியாளர்களான மதுரை தஞ்சை, செஞ்சி நாயக்கர்கள் தமிழகத்தின் பெரும்பகுதியை ஆட்சிபுரிந்தனர்.

திருமலைய்ய தேவமகாராஜன்

15 ஆம் நூற்றாண்டில் விஜய நகரப் பேரரசை, சங்கம குல மன்னன் மல்லிகார்ஜுனன், விருபாட்சன் போன்றவர்கள் ஆட்சி புரிந்தபோது தமிழகத்தை இம்மன்னர்களின் ஆட்சியாளனான (மகா மண்டலேசுவரன்) திருமலை தேவ மகாராஜன் நிருவகித்து வந்தான் கி.பி 1450 ஆம் ஆண்டு தஞ்சாவூர் மாவட்டம் பட்டீச்சரம் திருக் கோயிலில் வெட்டுவிக்கப் பெற்ற கல்வெட்டொன்று சாளுவ திருமலைய்ய தேவனை சோழமண்டலத்தின் மகா மண்டலேசுவரன் என்று குறிப்பிடுகிறது, (A.R.E 524 of 1920). இதே போன்று தஞ்சாவூர் மாவட்டம் பாபநாசத்தில் உள்ள இரண்டு கல்வெட்டுக்கள் சாளுவ திருமலைய்யாவை விஜய நகர அரசின் சோழ மண்டல ஆட்சியாளனாகக் குறிப்பிடுகின்றன. (ARE 527 of 1920, 448 of 1922). இவை முறையே கி.பி 1452 மற்றும் 1458 ஆம் ஆண்டு களுக்கு உரிய கல்வெட்டுக்களாகும்.

இம்மன்னவன் பட்டீச்சரம் தேனுபுரீசுவரர் திருக்கோயில் திருச்சத்தி முற்றம் கோபிநாதப்பெருமாள் கோயில் ஆகிய திருக் கோயில்களில் பல திருப்பணிகள், செய்ததோடு, பல அறக் கொடை களும் நல்கியுள்ளதை இங்குள்ள கல்வெட்டுக்கள் எடுத்தி யம்புகின்றன. இம்மன்னவன் பெயரால் சோழன் மாளிகையில் ஒரு குளம் " திருமலைராயன் குளம் " என்றுள்ளது. இதே போன்று காவிரியின் கிளை நதி ஒன்று திருமலைராயன் ஆறு என்றும், சோழ நாட்டு ஊர் ஒன்று "திருமலைராயன் பட்டினம்" என்றும் அழைக் கப்பெறுகின்றன. இவன் காளமேகம் என்ற புலவனுக்கு ஆக்கமளித்தான் என்பதை இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

கோனேரி தேவமகாராயன்

திருச்சி, தஞ்சைப் பகுதிகளான சோழமண்டலத்தை ஆண்ட

சாளுவ திருமலைய்யனின் ஆட்சி கி.பி 1471 - தமிழ் கரவருடம் இறுதி எய்தியது என்பதனைத் திருவரங்கம் வரலாறு கூறும் கோயிலொழுகு,

" ........ முன் கர வருஷத்திலே திருச்சிராப்பள்ளி சீர்மை முதலானதுகள் திருமலை ராஜாவுக்கு நடந்த பின்பு இந்த ராஜ்யத்திற்கு கோனேரி ராஜா கர்த்தராய் திருச்சிராப் பள்ளியில் பாளையம் " பண்ணிக் கொண்டிருக்கையில் ............. -

- என்று கூறுகின்றது.

எனவே திருமலை தேவமகாராயனின் ஆட்சிக்குப் பின்பு சோழநாட்டு அரசுரிமை தமிழ் மன்னனான கோனேரிராயன் என்பானுக்கு மாறியது என்பது தெளிவாகின்றது. பின்பு இவன் சோழமண்டலம் மட்டுமின்றித் தொண்டை மண்டலத்துக்கும் மகா மண்டலேசுவரனாய் திகழ்ந்து தனி ஆட்சி நடத்தினான் என்பதைக் கல்வெட்டுக்கள் உறுதி செய்கின்றன.

மாபலி வாணாதிராயர்கள்

இங்கு கோனேரிராயனின் ஆட்சி நிகழும் நாளில் பாண்டி மண்டலத்தில் வாணாதிராயர்களின் ஆட்சி நடைபெற்றது. வாணர்கள் சங்க காலம் தொட்டு தமிழகத்து அரசியலில் முக்கிய இடம் வகித்தவர்கள். பல்லவர்களின் ஆட்சியின் போது வடதமிழகத்தில் இவர்களது செல்வாக்கு மிகுந்திருந்தது. பல்லவர் ஆட்சி முடிவுஎய்திய போது வாணர்களின் ஆதிக்கம் காவிரிப்பகுதியில் திருச்சிக்கு அருகில் சிறந்திருந்தது. மூன்றாம் குலோத்துங்கன் மதுரையை வென்றபோது, மதுரையை வாணர் குல தலைவன் ஒருவனுக்கு அளித்து, " பாண்டியன் " என்ற பட்டமும் சூட்டினான். சுந்தரபாண்டியன் எழுச்சியால் வலிமை குன்றிய வாணர்கள், பாண்டியர்களின் மறைவிற்குப் பிறகு மதுரை, இராமநாதபுரம், கொங்கு நாட்டின் ஒருபகுதி ஆகியவற்றைத் தம் ஆட்சியின் கீழ் கொணர்ந்தனர். கி.பி 14 ஆம் நூற்றாண்டிலிருந்து 16 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி வரை இவர்கள் செல்வாக்கு பாண்டிய நாட்டில் சிறந்திருந்தது.

வாணர்கள் கல்வெட்டுக்களில் " மஹாபலி வாணாதிராயர் " என்ற பெயரில் குறிக்கப் பெறுகின்றார்கள். வைணவ பக்தியில் திளைத்த இவர்கள் அழகர் கோயில் இறைவன் மீதும், ஸ்ரீவில்லி புத்தூர் ஆண்டாளிடத்தும் அளவிலாப் பற்றுடன் திகழ்ந்தனர். வில்லிபுத்தூர் பெருங்கோபுரம் வாணர்குல தலைவனால் எடுக்கப் பெற்றதாகும். " புவனேக வீரன் ", " *சேது மூல ரக்ஷாதுரந்தரன்* " என்ற பட்டங்களையும் புனைந்தனர்.

கோனேரிராயனின் சமகாலத்தில் வாழ்ந்த வாணாதிராயன்

கல்வெட்டொன்று சிவலூரில் (திருமெய்யம் வட்டம்) உள்ளது. அது அம்மன்னவனைச் சுந்தரத் தோளுடையான், திருமாலிருஞ்சோலை நின்றான் என்று குறிப்பிடுகின்றது. கி.பி 1483 ஆம் ஆண்டு வெட்டுவிக்கப் பெற்ற நெக்கோனம் கல்வெட்டொன்று இவனது பட்டங்களாகச் சமரகோலாகலன், புவனேக வீரன், மதுராபுரி மகாநாயகன், பாண்டிய குலாந்தகன், இராஜ குலசர்பகருடன், கருட கேதனன் என்றெல்லாம் குறிக்கின்றது.

பாண்டிய நாட்டை ஆண்ட சுந்தரத்தோளுடையான் வானாதிராயனும் (புவனேக வீரன்) விஜய நகருக்கு உட்படாத தனி ஆட்சியை நடத்தினான். எனவே இவன் வெளியிட்ட *காசுகளில்* " புவனேக வீரன் " " சமர கோலாகலன் " என்ற தமிழ்ப் பெயர்கள் காணப்படுகின்றன. 15 மற்றும் 16 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வாணா திராயர்கள் அனைவருமே இதே வகைக் காசுகளைத் தான் வெளியிட்டனர். ஆரம்ப காலக்காசுகளில் பாண்டியர் மரபை ஒட்டி அவர்களது சின்னங்களான இணைகயலும், செண்டும் இவர்களது காசுகளிலும் இடம்பெற்றன.

**தென் காசிப் பாண்டியர்கள்**

15 ஆம் நூற்றாண்டில் தமிழகத்தின் தென்பகுதியான நெல்லை மாவட்டப் பகுதிகளை தென்காசியைத் தலைமை இடமாகக் கொண்ட தென்காசிப் பாண்டியர்கள் ஆட்சிசெய்தனர். ஜடாவர்மன் அரிகேசரி பராக்கிரம பாண்டியன் (கி.பி 1422 - 63), குலசேகரன் எனும் ஸ்ரீ வல்லபன் (கி.பி 1430 - 1474) ; அழகன் பெருமாள் பராக் கிரம பாண்டியன் (கி.பி 1468 - 1486), ஜடாவர்மன் குலசேகர பராக்கிரம பாண்டியன் (கி.பி 1480 - 1507) ஆகியோர் ஆட்சி புரிந்தனர்.

கோனேரிராயனின் சமகாலத்தில் வாழ்ந்த ஜடாவர்மன் குலசேகர பராக்கிரம பாண்டியனை நரசநாயக்கன் வென்று தமிழகத்தின் தென்பகுதியை விஜய நகரப் பேரரசின் கீழ் இணைத்தான். நரச நாயக்கனின் புகழ்பாடும் கல்வெட்டுக்களும், இலக்கியங்களும் குறிப்பிடும் " மானபூஷனன் " இத்தென்காசி பாண் டியனே என்று திரு K. A நீலகண்ட சாஸ்திரியார் கருதுகின்றார்.

விஜயநகர அரசின் கீழும், பின்னர் பல்வேறு மன்னர்களாலும் ஆளப்பெற்ற தமிழகத்தை நோக்கி வந்த பாமினி சுல்தான் மூன்றாம் மஹமத்ஷாவின் படைகள் கி.பி 1481 ஆம் ஆண்டு காஞ்சி நகரத்தை கைப்பற்றி கொள்ளையிட்டு சென்றதாகவும், பின்னர் விஜயநகரப் பெரும்படையின் தாக்குதலால் முகமதியப் படை தோல்வி யுற்றதோடு கொள்ளையிடப்பட்ட பொருள்கள் மீட்கப் பட்டதாகவும் ஆவணச் சான்றுகளால் அறிய முடிகிறது. (I.A vol 28 - P - 289).

இவை அனைத்தையும் தொகுத்து நோக்கும் போது 15 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வடதமிழகம் விஜய நகர ஆளுமைக்கு உட்பட்டுத் திகழ்ந்த தென்பதும் பின்னர் கோனேரி ராயனின் எழுச்சியால் இந்நிலை மாறியது என்பதும் அறியலாம். அதே நேரத்தில் தென்தமிழகத்தில் இருந்த வாணர்களும், தென்காசிப் பாண்டியர்களும் தனித் தன்மையுடன் இருந்தனர். எனவே 15 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி தமிழகத்து மன்னர்களால் தனித் தன்மையுடன் ஆளப்பெற்றது என்பதைத் தெளிவாக அறிய முடிகின்றது. மிகுந்த வலிமையுடன் திகழ்ந்த இம்மூன்று மரபி னருமே தமிழ் மண்ணின் மைந்தர்கள் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

# கோனேரிராயன் கல்வெட்டுக்கள்




1. திருமலை - திருப்பதி
2. திருவோத்தூர்
3. எலவானாசூர்
4. நல்லூர்
5. திட்டக்குடி
6. திருமழபாடி
7. சீர்காழி
8. வைத்தீஸ்வரன் கோயில்
9. திருப்பிறம்பியம்
10. பந்தநல்லூர்
11. கும்பகோணம்
12. திருச் செங்கட்டங்குடி
13. திருவரங்கம்
14. திருகற்குடி
15. திருச் செந்துறை
16. ஸ்ரீ முஷ்ணம்

# கோனேரிராயன் கல்வெட்டுக்கள் கூறும் வரலாறு

"ஸ்ரீமன் மகா மண்டலேசுவரன், பட்டுக்கட்டாரி, இராய பசவ சங்கரன், மதியாத மன்னர் மணவாளன், காஞ்சிபுர வரதீசுவர கோனேரி தேவ மஹாராஜர் " , என்று கல்வெட்டுக்கள் குறிப்பிடும் கோனேரிராயன் எனும் மன்னனது அரசு ஆணைகளைக் குறிப்பிடும் இருபத்திரண்டு கல்வெட்டுக்கள் தஞ்சாவூர், திருச்சி, தென் ஆர்க் காடு, வட ஆர்க்காடு மாவட்டங்களிலும், திருமலை திருப்பதியிலும் உள்ளன. இதுவரை தமிழக வரலாறு ஆராய்ந்த யாரும் இவற்றை முழுமையாகத் தொகுத்து ஆராயவில்லை.

சுமார் எழு கல்வெட்டுக்களையும், திருவரங்கத்து கோயி லொழுகு கூறும் கோனேரிராயன் பற்றிய செய்திகளையும் மட்டுமே அடிப்படையாகக் கொண்டு, கோனேரிராயன் என்பவனைப் பற்றி எழுதிய வரலாற்று அறிஞர்களும், தென்னிந்தியக் கல்வெட்டு அறிக் கை தொகுதி ஆசிரியர்களும், இவனை ஓர் அரசனாகக் கருதாமல், திருவரங்கம் பகுதியில் ஸ்ரீவைணவர்களுக்கு தொல்லைகள் கொடுத்த ஒரு முரடனாகவே கருதினர். திருவரங்கத்தில் கோ னேரிராயனுக்கு எதிர்ப்புத் தெரிவித்து, நால்வர் கோபுரமேறி உயிர் துறந்த நிகழ்ச்சிகள் மட்டுமே இதுவரை வரலாற்றில் இடம் பெற்றிருந்தன.

1978 ஆம் ஆண்டு தஞ்சைப் பகுதியில் கிடைத்த " கோனேரிராயன்" என்ற பெயர் (தமிழில்) பொறிக்கப்பட்ட காசுகள் பலவற்றை கண்டு அதன் அடிப்படையில் ஆராய முற்பட்ட போது, தமிழகத்தை இருபத்தைந்து ஆண்டுகள் ஆட்சிபுரிந்த கோனேரிராயன் என்ற தமிழ்மன்னனின் வரலாற்றைத் தாங்கிநிற்கும் இருபது கல்வெட்டுக்களைச் சோழ மண்டலம் மற்றும் தொண்டை மண்டலப் பகுதிகளில் காண முடிந்தது. அனைத்துக் கல் வெட்டுக்களும் அவனது அரசு ஆணையைக் குறிப்பிடுவதோடு, காலக் குறிப்புகளையும் காட்டி நிற்கின்றன. இக்கல்வெட்டுக்களைக் கால அடிப்படையில் கண்டு, அவனது வரலாற்றோடு தொடர்புடைய பிறசெய்திகளையும் இணைத்துத் தமிழக வரலாற்றில் குறிப்பாக 15 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த தன்மானமுள்ள தமிழ் மன்னனை, பெருவீரனை கோனேரிராயனாம் வைத்திய நாதக் காளிங்கராயனை இங்குக் காண்போம்.

இம்மன்னனது முதற் கல்வெட்டாகத் திகழ்வது தஞ்சாவூர் மாவட்டம், திருப்புறம்பியம் சாட்சிநாதர் கோயில் கோபுரக் கல்வெட்டேயாகும். இக்கல்வெட்டில் 1407, விஸ்வாசு ஆண்டு, மீன மாதம், புனர்பூசத்து நாள், திங்கட்கிழமை குறிக்கப்பெற்றுள்ளது. இதற்கு சரியான ஆங்கில ஆண்டு கி.பி *1485* மார்ச்சுத் திங்கள் 21 ஆம் நாளாகும். இக்கல்வெட்டுச் சாசனத்தில் விஜயநகரப் பேரரசன் தேவராயனின் (பிரபுடதேவராயன்) பெயர் குறிப்பிடப் பெற்று பின்பே மண்டலேசுவரனாக கோனேரிதேவமகாராஜன் குறிக்கப் பெறுகின்றான். இதில் " காஞ்சிபுர வரதீசுவரன் " என்று குறிக்கப் பெறுவதால் கோனேரிராயன் சோழமண்டலம், தொண்டை மண்டலம் ஆகியவை அடங்கிய விஜயநகரப் பேரரசின் தமிழகப் பகுதிக்கு மண்டலேசுவரனாய்த் திகழ்ந்தான் என்பதை அறிகிறோம். மேலும் கல்வெட்டின் தொடக்கம் விஜயநகர மன்னனைக் கூறியே, பின்பு கோனேரிராயனைக் குறிப்பிடுவதால் பிரபுடதேவராயன் எனும் தேவராயனைப் பேரரசனாக ஏற்றுக் கொண்டு அவனுக்கு உட்பட்ட தமிழகப் பகுதியின் பிரதிநிதியாகவே இக்கல்வெட்டில் கோனேரிராயன் காணப்படுகின்றான்.

இக்கல்வெட்டு ஒன்றே கோனேரிராயனை விஜயநகரப் பேரரசின் பிரதிநிதியாகக் காட்டும் சிறப்புடையதாகும். இதற்குப்பிறகு வெட்டு விக்கப் பெற்ற பத்தொன்பது கல்வெட்டுக்களிலும் விஜயநகரப் பேரரசர்களின் பெயர்கள் குறிக்கப் பெறாமல் கோனேரிராயனை, " கோனேரிதேவ மகாராஜா " வாக தனித் தன்மையுடன் காட்டுகின்றன.

திருப்புறம்பியம் கல்வெட்டில் காணப்பெறும் குறிப்பால் கோனேரிராயனின் வரலாற்றின் ஒரு பகுதி தெளிவடைகின்றது. இக்கல்வெட்டு கி.பி 1485 ஆம் ஆண்டுக் குறிப்போடு விஜயநகரப் பேரரசன் பிரவுடதேவராயனைக் குறிப்பிடுவதைக் கண்டோம். கி.பி 1486 ல் விஜய நகர அரியணையில் அமர்ந்தவன் சாளுவ நரசிம்மன். இவன் கி.பி 1336 ல் தோன்றிய சங்கமகுல மன்னர்களின் கடைசி மன்னனாகத் திகழ்ந்த பிரவுட தேவராயனை கி.பி 1485 இறுதியில் அழித்துவிட்டு, தனது தளபதியான நரசநாயக்கனின் துணையுடன் சாளுவ வம்சத்தைத் தோற்றுவித்தான். முறையான சங்கம குலத்தை அழித்துவிட்டு நரசநாயக்கனின் ஆற்றலின் உதவியால் விஜயநகரப் பேரரசின் அரியணை ஏறியதை மாண்டலீகர்கள் பலரும், பாளையக்காரர்களும் எதிர்த்தனர். அவ்வாறு கடுமையாக எதிர்த்தவர்களில் தமிழகத்தைச் சேர்ந்த கோனேரிராயனும், மாபலி வாணாதிராயனும் (சமரகோலாகலன்) அடங்குவர். எனவேதான் திருப்புறம்பியம் கல்வெட்டில் அவன் ஏற்றுக்கொண்ட சங்கமகுல

மன்னன் பெயர் காணப்படுகின்றது. பின்னர் வெட்டுவிக்கப் பெற்ற கல்வெட்டுக்களில் சாளுவ குல மன்னர்களின் பெயரோ அல்லது துளுவ குல மன்னர்களின் பெயரோ காணப்படவில்லை.

கோனேரிராயனின் இரண்டாம் கல்வெட்டாகத் திகழ்வது தென் ஆர்க்காடு மாவட்டம் திட்டக்குடி சுகாசனப் பெருமாள் திருக்கோயிலில் உள்ளதாகும். பராபவ ஆண்டு, கார்த்திகை மாதம் பத்தாம் நாள் குறிக்கப் பெற்றுள்ள இச்சாசனம் கோனேரி தேவமகாராஜா, வடகரை விருதராஜ பயங்கர வளநாட்டு, மேற்கால் நாட்டு, கரைப் போக்கு நாடு திட்டக்குடி பெருமாள் வீற்றிருந்த கோயில் தானத்தார்க்கு சர்வமான்யம் அளித்ததை விவரிக்கின்றது. கி.பி 1486 ஆம் ஆண்டு, நவம்பர் 8 ஆம் நாள் வெட்டுவிக்கப் பெற்ற இச்சாசனத்தால் தென் ஆர்க்காடு மாவட்டத்தின் இப்பகுதி கோனேரிராயனின் ஆளுகையின் கீழ் இருந்தது என அறிய முடிகின்றது.

கோனேரிராயனின் மூன்றாம் கல்வெட்டாகத் திகழ்வது திருச்சி மாவட்டம் திருமழபாடி வயித்தியநாத சுவாமி கோயிலின் திருவிழாத் திருமேனி அறையின் தென்புறச்சுவரில் காணப்படுவதாகும். பிலவங்க ஆண்டு, தனுஸ் மாதம், திரிதியைதிதி, புஷ்ய நட்சத்திரம் உடைய திங்கட் கிழமை நாள் குறிக்கப் பெற்றுள்ளது. கி.பி 1487 ஆம் ஆண்டு குறிக்கப்பெற்றுள்ள இச்சாசனத்தில், இத்திருக் கோயிலின் வழிபாட்டின் போது பணிசெய்யும் ஆடல்மகள் ஒருத்திக்கு இம்மன்னன் நிலம் அளித்த செய்தி குறிக்கப் பெற்றுள்ளது.

கோனேரிராயனின் நான்காம் கல்வெட்டாகக் காணப்படுவது திருச்சி மாவட்டம் திருமழபாடி வயித்திய நாத சுவாமி கோயில் இரண்டாம் இராஜகோபுர நுழைவாயிலின் இடப்புறம் உள்ளது. இதில் சகாப்தம் 1409 ன் மேல் செல்லாநின்ற பிலவங்க வருடம் தைமாதம் இருபத்து நாலாம் நாள் குறிக்கப் பெற்றுள்ளது. இதற்கு சரியான ஆங்கில ஆண்டு கி.பி 1487 ஜனவரி 20 ஆம் நாளாகும். இக்கல்வெட்டில் கோனேரிதேவமகாராஜர் திருமழபாடி திருக்கோயில் பூஜைகளுக்காகவும், திருப்பணிகளுக்காகவும் தன் அரண்மனை வருவாயிலிருந்து சில குறிப்பிட்ட வகைகளில் திருமழபாடி தானத்தார்க்கு அளித்ததைக் குறிப்பிடுகின்றது.

இம்மன்னனின் ஐந்தாம் கல்வெட்டு திருச்சி மாவட்டம் திருமுட்டம் (ஸ்ரீமுஷ்ணம்) நித்யேஸ்வரர் திருக்கோயிலின் கருவறை வடபுறச் சுவரில் உள்ளது. இதில் சக ஆண்டு 1410, கீலக ஆண்டு ஆடி 12 ஆம் நாளான சூரிய கிரகண நாள் குறிக்கப் பெற்றுள்ளது.

இது கி.பி 1488 ஆம் ஆண்டு ஜுலை பத்தாம் நாளாகும். இதில் நாகய்ய நாயக்கர் என்பவர் மூலம் திருநாராயண ஈஸ்வரமுடைய நாயனார்க்கு சர்வமான்ய நிலம் அளித்ததை விவரிக்கின்றது. மேலும் நாட்டின் பாதுகாப்பு நிமித்தம் நாகய்ய நாயக்கருக்கு அளிக்கப்பட்ட ஊர்கள் பற்றிய குறிப்புகளும் உள்ளன.

இதே தமிழ் கீலக ஆண்டு துலாமாதம் மகம் விண்மீனும் புதன் கிழமையும் குறிக்கப் பெற்ற கோனேரிராயனின் ஆறாம் கல்வெட்டு தஞ்சாவூர் மாவட்டம் சீர்காழி பிரமபுரீஸ்வரர் திருக்கோயில் கிழக்குப்புற உட்கோபுரத்தின் வலதுபுறம் காணப்படுகின்றது. சீர்காழி கோயிலுக்காக ஒரு கிராமத்தைச் சர்வமானியமாக அறிவித்துப் பிறப்பிக்கப் பெற்ற அரசு ஆணையாகவே இக் கல்வெட்டு உள்ளது. இது குறிப்பிடும் ஆண்டு கி.பி 1488 அக்டோபர் மாதம் முதல் நாளாகும்.

கிடைத்துள்ள கோனேரிதேவ மகாராஜனின் கல்வெட் டுக்களுள் ஏழாம் இடத்தைப் பெறுவது திருச்சி மாவட்டம் திருக்கற்குடி எனும் உய்யகொண்டான் திருமலை உய்ய கொண்ட நாதர் திருக்கோயிலின் கருவறைச் சுவரில் உள்ளது. சவுமிய வருடம் ஆடி மாதம் இருபத்தொன்றாம் நாள் குறிக்கப் பெற்றுள்ள இக்கல்வெட்டு, கி.பி 1489 ஆம் ஆண்டு ஆகஸ்ட் நான்காம் நாள் கோனேரிதேவமகாராயர் அளித்த அறக்கொடைகள் பற்றி விவரிக்கின்றது.

இதே கோயிலில் காணப் பெறும் மற்றொரு கல்வெட்டில் சகம் 1411, சௌமிய ஆண்டு ஆடிமாதம் 21 ஆம் நாள் குறிக்கப் பெற்று இம் மன்னவனின் பிரிதோர் அறக்கொடை பற்றிக் கூறுகின்றது. இது கி.பி 1489 ஜூலை 19 ஆம் நாள் ஞாயிற்றுக் கிழமையை குறிப்பிடும் எட்டாம் கல்வெட்டாகும்.

சகம் 1412 சாதாரண ஆண்டு கார்த்திகை மாதம் 10 ஆம் நாள் குறிக்கப்பட்ட கோனேரிதேவ மகாராயரின் கல்வெட்டொன்று (9 ஆம் கல்வெட்டு) திருச்சி மாவட்டம் திருமழபாடி வைத்திய நாதசுவாமி திருக்கோயிலின் இரண்டாம் கோபுரத்திற்கும், மூன்றாம் கோபுரத்திற்கும் இடையிலுள்ள மண்டபத்தின் கீழ்ப் புறத்தில் காணப்படுகின்றது. இது கி.பி 1490 நவம்பர் 8 ஆம் நாள் திங்கட் கிழமையைக் குறிப்பிடும் கல் வெட்டாகும். " கோனேரிராயன் திரு மண்டபம் " என்ற பெயரில் இம் மண்டபத்தை கோனேரிராயன் எடுத்த செய்தி இங்குக் குறிக்கப்பெற்றுள்ளது.

கும்பகோணம் நாகேசுவரன் கோயில் கருவறை முன் மண்டபம் வடபுறச் சுவரில் உள்ள இம்மன்னவனின் கல்வெட்டு ;

இவன் வரலாறு கூறும் பத்தாம் கல்வெட்டாகத் திகழ்கிறது. இதில் சகம் 1412 சாதாரண வருஷம் விருஷிகத்து மகரனாயறு, அபரபட்சத்து நவமி, ஆதிவாரம் பெற்ற அஸ்தத்து நாள் குறிக்கப் பெற்று மன்னன் பெயரில் அளிக்கப்பட்ட அறக்கட்டளை பற்றி விவரிக்கின்றது. இக்கல்வெட்டும் கி.பி 1490 ஆம் ஆண்டுக்குரியதே.

அடுத்து சகம் 1414 பரிதாபி ஆண்டு ஆவணித் திங்கள் 26 ஆம் நாள் குறிக்கப் பெற்ற பதினொன்றாம் கல்வெட்டு, திருமழபாடி வயித்தியநாத சுவாமி திருக்கோயில் இரண்டாம், மூன்றாம் கோபுரங்களுக்கு இடையில் உள்ள " கோனேரிராயன் திருமண்டபத்தின் " மேற்குப் பகுதியில் காணப்பெறுகின்றது. இதில் இம்மன்னவனின் அரசு ஆணையும், " கோனேரிராயன் பண்டாரம் " பற்றிய குறிப்பும் உள்ளன. இதன்காலம் கி.பி 1492 ஆகஸ்ட் மாதம் வெள்ளிக் கிழமையாகும்.

இம்மன்னவனின் வரலாறு கூறும் பனிரெண்டாம் கல்வெட்டாகத் திகழ்வது திருவரங்கம் அரங்கப் பெருமான் கோயில் கல்வெட்டாகும். இதுவும் சக ஆண்டு 1414, பரிதாபி ஆண்டு ஆவணி 26 ஆம் நாள் வெள்ளிக் கிழமை, உத்திர நாளில் வெளியிடப் பெற்ற கோனேரிராயனின் சாசனமாகும். இக்கல்வெட்டு அரங்கன் கோயில் கோபுரம் ஒன்றுக்குக் கதவுகள் இட்டமையை விவரிக்கின்றது.

திருவரங்கம் திருக்கோயிலிலுள்ள மற்றொரு கல்வெட்டு கோனேரிராயரின் பதிமூன்றாம் கல்வெட்டாக இம்மன்னனி வரலாறு பேசுகின்றது. பரிதாபி ஆண்டு மார்கழி மாதம் குறிக்கப்பெற்றுள்ள இக்கல்வெட்டில் கோனேரிராயன் கி.பி 1492 ல் அரங்கனுக்கு அளித்த நிலம் பற்றி கூறுகின்றது.

மேற்குறித்த திருவரங்கம் கல்வெட்டுக்கள் இரண்டும் கோனேரிராயனின் வரலாற்றில் சிறப்பிடம் வகிக்கும் கல்வெட்டுக்களாகும். இவை பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் போன்ற ஆய்வு அறிஞர்களின் கவனத்திற்கு வராமல் போனதால்தான், கோனேரிராயன்பற்றி வேறுவிதமான கருத்துக்களைத் தம் நூல்களில் குறிப்பிடும் படியாயிற்று. திருவரங்கத்து அரங்கன் பால் மிகுந்த பக்தி உள்ளவன் என்பதை இக்கல்வெட்டுக்களே பறைசாற்றுகின்றன.

அடுத்து கோனேரிராயனின் வரலாறு பேசும் பதினான்காம் கல்வெட்டு திருச்சி மாவட்டம் திருச்செந்துறை வில்வாரண்யேஸ்வரர் திருக்கோயிலில் உள்ளது. இக்கல்வெட்டு ஈசானமங்கலத்து திருச்செந்துறையுடைய நாயனார் கோயிலுக்காக கோனேரிராயனால் அளிக்கப் பெற்ற வரிவிலக்குகள் குறித்துப் பேசுகின்றது. சகம் 1414

பரிதாபி ஆண்டு மார்கழி பதினெட்டாம் நாள் குறிக்கப்பெற்றுள்ள இச்சாசனம் கி.பி 1492 டிசம்பர் 15 ஆம் நாளுக்குரியதாகும்.

இம்மன்னனின் பதினைந்தாம் கல்வெட்டாகத் திகழ்வது தஞ்சாவூர் மாவட்டம் பந்தநல்லூர் ஆதிகேசவப்பெருமாள் திருக்கோயில் கருவறையின் மேற்குப்புறம் உள்ளது. விரோதிகிருது ஆண்டு பங்குனி ஒன்பதாம் நாளுக்குரிய இக் கல்வெட்டு கி.பி 1492 ஆம் ஆண்டு மார்ச் ஐந்தாம் நாள் வரையப் பெற்றதாகும். இது கோனேரிதேவமகாராயன் பசுபதீசுவர மகாதேவர்க்கும், ஆதிகேசவ பெருமாளுக்கும் சில வரிவிலக்குகள் அளித்து இட்ட ஆணையாகும்.

காஞ்சிபுரவரதீசுவரனின் வரலாறு பேசும் பதினாறாம் கல் வெட்டு தென் ஆர்க்காடு மாவட்டம் நல்லூர் நல்ல நாயனார் திருக் கோயில் எனும் வில்வாரண்யேஸ்வரர் திருக்கோயில் மண்டபத்தின் தென்புறம் உள்ளது. சக ஆண்டு 1415 கும்பமாதம் புனர்பூசநாள், திங்கட்கிழமை குறிக்கப் பெற்றுள்ள இக்கல்வெட்டு கி.பி 1493 ஆம் ஆண்டு ஜனவரி இருபத்தெட்டாம் நாள் கோனேரி தேவ மகாராயரால் அளிக்கப் பெற்ற சர்வமான்யங்கள் பற்றி விவரிக் கின்றது.

இதே ஆண்டு ஆகஸ்ட் பத்தொன்பதாம் நாளுக்குரிய, சகம் 1415 பிரமாதீச ஆண்டு சிம்ம ஞாயிற்று (ஆவணி) பூர்வபட்ச சப்தமியும், சோம வாரம் பெற்ற அனுஷத்து நாளில் கோனேரி தேவமகாராயர் திருமலை வேங்கடவனுக்காக சோழநாட்டில் அளித்த இரண்டு ஊர்கள் பற்றியும், வேங்கடவனுக்கு இம்மன்னவன் பெயரால் நடத்த வேண்டிய அமுதுபடிகள் பற்றியும் பேசுகின்றது. இப்பதினேழாம் கல்வெட்டு.

வடவேங்கடத்தில் கூட இவனது புகழ்பாடும் கல்வெட்டு இருப்பது இம்மன்னவனின் தனிச்சிறப்பைக் காட்டுவதோடு வைணவம் போற்றியவன் என்பதற்கும் இது சான்றாக நிற்கின்றது.

கோனேரிராயனின் இறுதி ஆண்டு கல்வெட்டுக்களாகத் திகழ்பவை இரண்டாகும். இவை கி.பி 1495 ல் வெட்டுவிக்கப் பெற்றவையாகும். பதினெட்டாம் கல்வெட்டாகத் திகழும் திருச்செங்காட்டாங்குடி கல்வெட்டு உத்திராபதீஸ்வரர் திருக்கோயில் இரண்டாம் கோபுர வாயிலின் வலப்புறம் உள்ளது. மாளுவ சக்ரவர்த்தியின் வேண்டுகோளின் பேரில் விழாக்கள் நடத்த கோனேரிராயன் அளித்த சில சலுகைகள் பற்றியே இக்கல்வெட்டு குறிக்கின்றது.

பத்தொன்பதாம் கல்வெட்டாகத் திகழ்வது தஞ்சாவூர் மாவட்டம் புள்ளிருக்கு வேளூர் எனும் வைத்தீஸ்வரன் கோயில் கல்வெட்டாகும். மேலக் கோபுரவாயிலுக்கு வடக்கில் கீழ்ப்புறச் சுவரில் காணப்படும் இக்கல்வெட்டு ஆனந்த வருடம் மார்கழி பதினைந்தாம் நாட்குறிப்போடு உள்ளது. இது கோனேரிதேவ மகாராயனால் புள்ளிருக்கு வேளூர் தானத்தார்க்கு அனுப்பிய நிருபம்பற்றி குறிப்பிடுகின்றது.

தஞ்சாவூர் மாவட்டம் துக்காச்சி ஆபத் சகாயேஸ்வரர் திருக்கோயில் கிழக்கு உள் இராஜ கோபுரத்தின் இடதுபுறம் உள்ள கல்வெட்டில் இம்மன்னவனின் ஆட்சியாண்டு குறிக்கப் படவில்லையாயினும், இம்மன்னவனின் அமைச்சர் மற்றும் அதிகாரிகள் பற்றிய குறிப்புகள் உள்ளன. இது இவனது 20 ஆம் கல்வெட்டாகும்.

திருக்கோயிலூர் தாலுகா உளுந்தூர்பேட்டை வட்டம் எலவானாசூர் பண்டு இறையானரையூர் என்று அழைக்கப் பெற்றதாகும். இங்குள்ள சிவாலயம் ஊர்பாகங் கொண்டார் திருக்கோயில் என அழைக்கப்பெற்றது. பின்பு கிராம அர்த்த நாரீஸ்வரர் கோயில் எனவும் அழைக்கப்பெற்றது. இத்திருக் கோயிலின் வெளித்திருச் சுற்றின் மேற்குப்புற சுவரில் கல்வெட்டுப் பாடல் ஒன்று உள்ளது. இதனை ஆராய்ந்த தொல்லியல் துறையினர் கி.பி 15 ஆம் நூற்றாண்டு கல்வெட்டாகக் குறித்துள்ளனர். இச்சாசனப் பாடல் கோனேரிதேவ மகாராஜனின் ஆளுகையின் போது கச்சி நகரினன் ஒருவன் சூரியன் குறிச்சி எனும் ஊரினை எலவானாசூர் இறைவனுக்கு அளித்ததைக் குறிப்பிடுகின்றது. கோனேரிராயனின் வரலாறு பேசும் கல்வெட்டுக்களில் இது இருபத்தொன்றாம் கல்வெட்டாகும்.

காஞ்சிபுரத்திற்கு அருகில் உள்ள திருவோத்தூர் (செய்யாறு) சிவாலயத்தின் திருமதிலுக்கு கோனேரிராயன் திருமதில் என்ற பெயருண்டு. இம்மதிலில் மிக நீண்ட சிற்பத்தொகுதி ஒன்று உள்ளது. அதில் பல்லக்கில் பவனிவரும் மன்னன் ஒருவனது சிற்பம் காணப் படுகின்றது. இச்சிற்பத்திற்குக் கீழாக " கோனேரிராயந் " என்று தமிழிலும், தெலுங்கு மொழியிலும் கல்வெட்டுக்கள் உள்ளன. இம் மன்னனது திருவுருவத்தைச்சுட்டும் வண்ணம் உள்ள இக்கல் வெட்டும் கோனேரிராயனின் வரலாற்றில் மிக முக்கியத்துவம் பெற்றுத் திகழ்கின்றது. கோனேரிராயனின் கல்வெட்டுக்கள் வரிசையில் இது 22 ஆம் கல்வெட்டாகத் திகழ்கிறது.

கோனேரிராயன் பற்றி நேரடியாகப் பேசும் இக்கல்வெட்டுக்கள்

தவிர, இவனது வரலாற்றோடு தொடர்புடைய மூன்று கல்வெட்டுக்கள் திருவரங்கம் திருக்கோயிலில் உள்ளன. முதல் இருகல்வெட்டுகள் திருவரங்கம் திருக்கோபுரம் ஏறி உயிர்துறந்த பெரியாழ்வார், அப்பாவய்யங்கார் ஆகியோர் பற்றி விவரிக்கின்றன. கோயிலொழுகு எனும் திருவரங்கம் வரலாறு பேசும் நூல் இந்நிக்ழ்ச்சிகள் பற்றித் தெளிவாக உரைக்கின்றது. மூன்றாம் கல்வெட்டு கோனேரிராயனின் மகன்பற்றிய ஒரு குறிப்பினை மட்டும் சுட்டி நிற்கின்றது. இம்மூன்று கல்வெட்டுக்கள் அடிப்படையில் கோனேரிராயன் பற்றிய விரிவான செய்திகளை பின்வரும் பக்கங்களில் காண்போம்.

கோனேரிராயனின் அனைத்துக் கல்வெட்டுக்களையும் தொகுத்து நோக்கும்போது இவனது இயற்பெயர் வயித்தியநாத காலிங்கராயன், என்பதும் இவன் மகாமண்டலேசுவரன், பட்டுக்கட்டாரி, இராயபசவ சங்கரன், மதியாத மன்னர் மணவாளன், காஞ்சிபுர வரதீசுவரன் என்ற பட்டங்கள் புனைந்து கோனேரி தேவ மகாராயன், கோனேரிராயன் என்ற பெயர்களுடன் திகழ்ந்த தமிழ் மன்னன் என்பதும் தெளிவாகின்றன. பிரபுட தேவராயன் எனும் விஜயநகர சங்கம குல மன்னனைப் பேரரசனாக ஏற்றுக் கொண் டவன் பின்னர் வந்த விஜய நகரப் பேரரசர்களையோ, நரச நாயக்கனையோ ஏற்காதவன் என்பதும் வெள்ளிடை மலை. தனது தனித் தன்மையைக் காட்டவே பல அரசு ஆணைகளைக் கல் வெட்டாக வெட்டியுள்ளதோடு தன்பெயரில் காசும் வெளி யிட்டுள்ளான். கி.பி. 1495 -க்குப் பிறகு கோனேரிராயனின் கல்வெட் டுக்கள் காணப்படாதது, கி.பி 1496 லிருந்து நரசநாயக்கனின் வருகை உணர்த்தும் கல்வெட்டுக்களும், விஜயநகரப் பேரரசுக்கு மீண்டும் உட்பட்ட தமிழகத்து கல்வெட்டுக்களுமே காணப்படுவதால் கி.பி 1496 ல் கோனேரிராயனின் நல்லாட்சி முடிவுற்றது என்பதை அறிய இயலுகின்றது. கி.பி 1496 இல் நரச நாயக்கன் கோனேரிராயனை முறியடிக்க, திக்விஜயம் வந்த போது, அவனால் வெட்டுவிக்கப் பெற்ற கல்வெட்டொன்று தென் ஆர்க்காடு மாவட்டம் வாரன்ஜரம் எனும் ஊரில் உள்ளதால் இந்நிகழ்ச்சி மேலும் உறுதிபெறுகின்றது.

# திருவரங்கத்தில் நிகழ்ந்தது ... !

செம்பொன் மதில் எழுடுத்த திருவரங்கப் பெருங்கோயில் தமிழகத்துத் திருக்கோயில்களிலெல்லாம் தலையாயதாகப் போற்றப்படும் பெருமையுடையது. அரவணையில் துயிலும் பெருமானின் பேரழகை, " விரிதிரைக் காவிரி வியன்பெருந்துருத்தித் திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும் " - என 1700 ஆண்டுகளுக்கு முன்பே இளங்கோ அடிகள் சிலம்பில் பேசுகின்றார். இவனுறையும் இத்திருப்பதியில் கால வெள்ளத்தில் எத்தனை எத்தனையோ வரலாற்று நிகழ்ச்சிகள் நிகழ்ந்துள்ளன. நானூறுக்கும் மேற்பட்ட கல்வெட்டுக்களைச் சுமந்து நிற்கும் இக்கற்றளி கூறும் வரலாறு ஒன்றல்ல ! இரண்டல்ல ..! வரலாறு கூறும் கல்வெட்டுக்கள் போன்றே, இத்திருக் கோயிலில் நூற்றுக்கும் மேற்பட்ட வரலாற்று நாயகர்களின் உருவச்சிலைகளும் உள்ளன.

இவ்வாறு திருவரங்கம் கோயிலில் இடம் பெற்றுள்ள வரலாற்று நாயகர்களின் உருவச்சிலைகள் வரிசையில் தெற்கு இராயகோபுர வாயிலின் கிழ்ப்புறம் கல்வெட்டுக் குறிப்புடன் உள்ள ஒரு சிலையும், கிழக்குக் கோபுரங்களுள் மிகப் பெரிதான வெள்ளைக் கோபுரவாயிலின் வடபுறம் மற்றும் தென்புறம் உள்ள உருவச் சிலைகளும், அங்குள்ள கல்வெட்டுக் குறிப்புகளும் தமிழக வரலாற்றில் 15 ஆம் நூற்றாண்டில் நிகழ்ந்த பல அரிய நிகழ்ச்சிகளை எடுத்துக் காட்டும் வண்ணம் திகழ்கின்றன.

**அப்பாவய்யங்கார்**

ஆசியாவிலேயே மிகப் பெரிய இராஜ கோபுரமாகத் திகழும் அரங்கத்துத் தெற்குக் கோபுரத்தின் கிழ்ப்புற நிலையில் சுமார் மூன்றடி உயரத்தில் நெற்றியில் திருமண் தரித்து, மார்பில் மாலைபுரள கூப்பியகரங்களுடன் உள்ள கற்படிமமே அப்பா வய்யங்காருடையதாகும்.

இவ்வுருவச் சிலைக்கு சற்று மேலாக உள்ள கல்வெட்டில் " *சுபமஸ்த்து சௌமிய வருஷம் தைமாதம் நாலாம் தேதி வெள்ளிக் கிழமை நாள் ஸ்ரீரங்கநாத சுவாமிக்கு படித்தனம் ஒன்றும் நடத்தாமல் மிகவும் அன்னியாயம் பண்ணுகையில் குடுக்கமாட்டாதே இந்த திருக்கோவிரத்தில் ஏறி விழுந்து இறந்தகாலம் எடுத்த அழகியமணவாளதாசன் ஸ்ரீகாரியம் அப்பா வய்யங்கார். இவருக்கு சுவாமி வெக்காளகள் திருத்தேர்புறப்பாட்டு முதலான அதிய விசை பிரசாதித்தருளி பிரம்மமேத சம்ஸ்காரம்' பண்ணிவித்தருளி*

பெரியாழ்வாரும், ஜீயர்களும் கோபுரம் ஏறிவிழுந்து
உயிர் துறந்த வெள்ளைக் கோபுரம் - திருவரங்கம்



அப்பாவய்யங்கார் உருவச் சிலை
தெற்கு இராயகோபுரம் - திருவரங்கம்

*முழுபடித்தனம் கொண்டருளினார் யிப்படி நடந்த இந்த முழு படித்தனத்துக்கு விரோதம் பண்ணினவன் ரெங்கத் துரோகியாய் போகக் கடவன். அனுகூலம் பண்ணினவன் ஸ்ரீ லட்சுமி பரிபூர்ண கடாக்ஷ பாக்கியஸ்தனா இருக்கக் கடவன்* " என்று எழுதப் பட்டுள்ளது.

பெரியாழ்வாரும் ஜீயர்களும்

இதே திருக்கோயிலின் கிழக்குக் கோபுரமான வெள்ளைக் கோபுரத்தின் வடபுற நிலைக்காலில் நெற்றியில் திருமண் தரித்து, கையில் தூக்கிய அரிவாள் ஒன்றினைத் தோளில் சுமந்த வண்ணம், இடுப்பில் ஆடை தரித்து கழுத்தில் மாலையும் சூடி அரங்கனை வணங்கும் கோலத்தில் ஓர் அடியவர் சிலையுள்ளது. இதற்கு மேலாக ஒரு கல்வெட்டும் உள்ளது.

இக்கல்வெட்டு " *ஸ்வஸ்தி ஸ்ரீ சௌமிய வரு தைமாதம் இருபதாம் தேதி வெள்ளிக்கிழமை ஸ்ரீரங்கநாத சுவாமிக்கு படித்தனம் ஒன்றும் நடத்தாமல் மிகவும் அன்னியாயம் பண்ணுகையில் பொறுக்க மாட்டாதே யிந்த திருக்கோபுரத்திலேறி விழுந்து இறந்த காலமெடுத்த அழகிய மணவாளதாசன் ஸ்ரீ காரியம் பெரியாழ்வார் ......* " என்று கூறுகிறது. எனவே தோளில் அரிவாள் சுமந்து வணங்கும் கோலத்திலுள்ள இவ்வுருவச் சிலை பரமபதத்துக்குப் போன பெரியாழ்வார் என்பவருடையது என்று தெளிவாகிறது.

இவ்வுருவச் சிலைக்கு நேர் எதிர்ப் புறம் இரண்டு ஜீயர்களின் திருவுருவங்கள் நிலைக்காலில் காணப்படுகின்றன. இவர்கள் இருவரும் நெற்றியில் திருமண் தரித்து, தலையில் முண்டாசு, இடுப்பில் ஆடை, அதன் மேல் கட்டப்பட்ட துண்டு, மார்பில் மாலைகள் புரள கையில் துறவுக்குரிய தண்டும் தாங்கி அரங்கனை வணங்கும் கோலத்திலுள்ளனர். இவ்வுருவச் சிலைகள் இரண்டும் வைணவ சமயத் தலைவர்களான ஜீயர்களுடையது என்பது தோற்றத்தால் விளங்குகின்றது.

இவ்விருவர் பற்றிய கல்வெட்டுக் குறிப்புகள் இல்லையாயினும், திருவரங்கத்து வரலாறு கூறும் நூலான கோயிலொழுகுவில் உள்ள *கந்தாடை இராமானுஜதாசர் கைங்கர்யம்* எனும் பகுதியில் " *இரண்டு ஜீயர்களும் ஏகாங்கிகளும் கோபுரத்திலே ஏறி சரீரத்தை பேக்ஷித்ததாலும் .......* என்று கூறுகிறது. எனவே இங்கு காணும் இரண்டு ஜீயர்களும் பெரியாழ்வார், அப்பாவய்யங்கார் போன்று கோபுரத்தின் மேலேறி உயிர்துறந்தவர்கள் என்பதை அறிய முடிகிறது.



பெரியாழ்வார் உருவச் சிலை வெள்ளைக் கோபுரம்

**உயிர் துறக்கக் காரணம் என்ன ?**

கி.பி 1489 - தமிழ் சௌமிய ஆண்டு தைமாதம் தெற்குக் கோபுரத்திலிருந்தும், வெள்ளைக் கோபுரத்திலிருந்தும் அப்பா வய்யங்கார், பெரியாழ்வார் மற்றும் இரண்டு ஜீயர்களும் கீழே விழுந்து உயிர்த்தியாகம் செய்ததற்கான காரணம் என்ன ? என்பதை ஆராய முற்படும் போது, இதற்கான விளக்கத்தைக் கோயிலொழுகு விரிவாகப் பேசுகிறது.

கந்தாடை இராமானுஜதாசன் கைங்கர்யம் என்ற பகுதியில், " முன்கர வருஷத்திலே திருச்சிராப்பள்ளி சீர்மை முதலானதுகள் திருமலை ராஜாவுக்கு நடந்தபின்பு, இந்த ராஜ்யத்திற்கு கோனேரிராஜா கரத்தராய் திருச்சிராப் பள்ளியிலே பாளையம் பண்ணிக் கொண்டிருக்கையில், ஆனைக்காவலாருக்கு கோனேரிராஜா ஸஹாயம் பண்ணி மஞ்சள் பொடியிறைத்து விளையாடும் படி பண்ணுவித்தும், திருமலை சோலை எல்லையை அமைத்துக் கொள்ளும்படி பண்ணுவித்தும், கோட்டை சாமந்தனார் சென்றப்ப நாயக்கர் உள்ளிட்டாருக்குக் குத்தகையாகத் திருவிடையாட்டச் சீர்மை அமைத்துக் கொண்டும் கோயிலிலேயும் புரவுவரி, காணிக்கை, பட்டு பரிவட்டம் என்று அனேகம் பொன்களை எடுத்துக்கொண்டு ஸ்தலத்தை நெருக்கி பஹீஈதிபாதை பண்ணுகையில் இரண்டு ஜீயாளும் ஏகாங்கிகளும் கோபுரத்திலேறி சரீரத்தையுபே க்ஷித்தாலும் உபத்ரவம் பண்ணுகையில், கந்தாடை ராமானுஜன் இந்த சேதிகளெல்லாம் பலகாலும் நரசாநாயக்கருக்கு அறிக்கை பண்ணின படியினாலே தெற்கு திசையில் ராஜகார்ய வ்யாஜமாக அநேக தனத்துடனே *நரஸா நாயக்கர்* வந்து *கோனேரிராஜாவை ஸம்ஹரித்து* திருச்சிராப் பள்ளி உட்பட்ட ராஜ்யமும் நளவருஷம் ஐப்பசி மாஸம் பதிநாலாந்தேதி *நாகமநாயக்கரும்* குமாரர் *நரஸா நாயக்கரும்* வந்து பெருமானை ஸேவிக்க, கந்தாடை ராமானுஜனும் அவர்களை ஸேவிக்க பண்ணி வைத்து, திருவிடையாட்டச் சீர்மையையும் பலரும் ஒத்திகையாக அநுபவித்த சீர்மையையும் பெருமாள் ஸ்ரீபண்டாரத்திலே கண்டு கொள்ளும்படி நரஸா நாயக்கர் ராயசமும் வாங்கி, திருவிடையாட்டங்களும் விடுவித்துக் கொண்டு திருவிடையாட்டச் சீர்மையிலே வெட்டி வரியும், நாட்டுத் தலையாரிக்குமுட்படப் புரவரியும் ஸர்வமாந்யமாக கழிப்பித்துக் கொண்டு முத்துக்கல் கண்ட மாலை பதக்கம் முதலான பல திருவாபரணங்களும் அறுவாணம் திருவெண்சாமரம் பட்டுவகை பலவும் ஸ்ரீ பண்டாரத்திலே முதலீடு வித்து கருவுகலத்திலே ஸ்தாபிதமும் கட்டுவித்து திருக்கொட்டாரம் நெல்லும் அமுதுபடியும் குத்தக் கொழிக்க நூறு கோயிலடியார்

விழுக்காடு நரஸாநாயக்கன் உபயமாக என்றென்றைக்கும் நடக்கும்படி வாங்கிவிட்டு பெருமாள் திருவாராதநக்கட்டளை சாத்தும்படி வர்க்க வகை கட்டளைகள் முதலானதுகளுக்கும் மாதவய்யங்காரைக் கட்டளையிட்டு, ஒன்றாலொன்று குறையில்லாமல் நடப்பித்தார் " .... - என்று கூறுகிறது.

இதனால் கரவருடம் (கி.பி 1471 - இல்) திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர் பகுதிகளுக்கு விஜயநகரப் பேரரசின் ஆளுனராய்த் திகழ்ந்த திருமலைராயனின் மறைவிற்குப் பின்பு கோனேரிராஜா பாளையக்காரராகத் திகழ்ந்ததாகவும், இவர் திருவானைக்கா கோயிலுக்கு எல்லா உதவிகளையும் செய்ததோடு, திருவரங்கம் கோயிலுக்குரிய புரவரி, காணிக்கை, பட்டு, பரிவட்டம் போன்ற பல வருவாய்களைப் பிடுங்கித் திருவானைக்கா கோயிலுக்கு அளித்த செய்தியை அறியமுடிகிறது. திருவரங்கன் கோயில் நிலங்களைக் கோட்டை சாமந்தன், சென்றப்ப நாயக்கன் என்பவர்களுக்குக் குத்தகைக்கு கொடுத்ததோடு, கோயில் நிர்வாகிகளுக்குப் பல இடையூறுகளை அளித்தமையால், இதற்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் வண்ணம் இரண்டு ஜீயர்களும், ஏகாங்கிகளும் திருவரங்கம் கோபுரத்திலேறி கீழே விழுந்து உயிர்த்தியாகம் செய்தனர் என்ற செய்தியும் கூறப்பெற்றுள்ளது. இதன் பின்னர் கந்தாடை இராமனுஜதாசர் இந்நிகழ்ச்சிகளைக் குறித்து விஜய நகரத் தளபதி நரசா நாயக்கனுக்குப் பல முறை அறிக்கை அனுப்பியதால், நரச நாயக்கன் திருச்சிராப்பள்ளி வந்து கோனேரிராயனுடன் போரிட்டு, வென்ற பின்னர் திருவரங்கம் ஆலயம் சீர் பெற்றதாகவும் கூறுகின்றது.

இவை அனைத்தையும் தொகுத்து நோக்கும் போது கோனேரிராயனின் நசுக்குதலுக்கு திருவரங்கன்கோயில் நிர்வாகம் ஆட்பட்டதால் இரண்டு ஜீயர்கள், அப்பாவய்யங்கார், பெரியாழ்வார் முதலியவர்கள் கோபுரங்களின் மேலிருந்து விழுந்து, தம் இன்னுயிர் ஈந்து கோனேரிராயனின் நெருக்குதல்களுக்கு முடிவு கட்டினர் என்ற செய்தி பெறப்படுகிறது. இந்நிகழ்ச்சிகளை மையமாகக் கொண்டு இதுவரை ஆராய்ந்த வரலாற்று ஆராய்ச் சியாளர்கள், கோனேரிராயனை வைணவ எதிரியாய்க் கொண்டு, ஒரு கொடுங்கோலனாகவே குறித்தனர்.

கி.பி 1486 ல் விஜயநகர மன்னன் பிரபுட தேவராயனின் ஆட்சி சாளுவ நரசிம்மனால் கவிழ்க்கப்பட்டதையும், இதனால் விஜயநகரப் பேரரசின் சங்கம குலம் அழிந்து சாளுவ குலம் உதயமாயிற்று என்பதையும், சங்கம குல மன்னர்களைப் பேரரசர்களாக ஏற்றுக் கொண்ட கோனேரிராயனால் தனக்குச் சமமான பதவியில் இருந்தவர்களைப் பேரரசர்களாக ஏற்றுக் கொள்ள இயலவில்லை

என்பதையும் முன்பே கண்டோம். இதனால் தான் கி.பி 1486 லிருந்து 1495 வரை கோனேரிராயனின் தனி அரசு தொடர்ந்து விஜயநகர அரசுக்கும் இவனுக்கும் பகைமை மூண்டது.

கோனேரிராயனின் திருக்கோயிற் பணிகள் எந்த அளவுக்குச் சிவாலயங்களுக்காக செய்யப் பெற்றனவோ, அந்த அளவு வைணவ ஆலயங்களுக்கும் நடந்தன. இதனை இம்மன்னவனது பலகல் வெட்டுக்கள் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன. திருப்பதி திருமலைக் கோயிலில் நாள்தோறும் தன்பெயரால் அமுதுபடி செய்திட சோழநாட்டு ஊர்கள் இரண்டினை வழங்கி கல்வெட்டும் வெட்டியுள்ளான். பந்த நல்லூர் ஆதிகேசவனுக்குப் பல அறக்கொடைகளையும் அளித்துள்ளான். ஏன் ? பிரச்சனைகளுக்கு உரியதிருவரங்கம் திருக்கோயிலுக்கே கோனேரிராயன் பல திருத்தொண்டுகள் செய்துள்ளதை அரங்கத்து கல்வெட்டுக்கள் பேசுகின்றன. திருவரங்கம் சொர்க்கவாசல் கோபுரத்திற்குக் கோனேரி ராயனே தன் பெயரால் கதவுகள் அளித்துள்ளான். இவற்றுக் கெல்லாம் மகுடமாகத் திருவரங்கப் பெருமானுக்கு நாள்தோறும் தன் பெயரால் தயிர் அன்னம் நிவேதனம் செய்யப் பிச்சாண்டார் கோயிலில் நிலமும் அளித்துள்ளான். இத்தனையும் செய்த கோனேரிராயனை வைணவ எதிரியாக எப்படிக் கூற முடியும் ?

திருவரங்கம் திருக்கோயிலில் சிலைகளாக நிற்கும் அப்பாவய்யங்கார், பெரியாழ்வார் மற்றும் ஜீயர்கள் இருவரின் உயிர்த்தியாகத்திற்குப் பிறகு, கந்தாடை இராமனுஜதாசரின் வேண்டு கோளுக்கிணங்க நரசநாயக்கன் தன் பெரும்படையுடன் வந்து கோனேரிராயனுடன் போரிட்டு, அவனைத் தோல்வியுறச் செய்து, சோழமண்டலத்து ஆட்சியுரிமையை கி.பி 1496 ல் அகற்றினான் என்பதைக் கோயிலொழுகும், கல்வெட்டுக்களும் மெய்ப்பிக்கின்றன.

கி.பி 1496 ல் நரச நாயக்கன் கோனேரிராயனை முறியடிக்க “ திக் விஜயம் ” வந்த நிகழ்ச்சியைத் தென் ஆர்க்காடு மாவட்டம் வாரன்ஜரம் எனும் ஊரில் உள்ள கல்வெட்டொன்று வலியுறுத் துகின்றது. மேலும் திருமலாம்பா எழுதிய வரதாம்பிகா பரிணயசம்பு எனும் தெலுங்கு மொழிக்காவியம் நரச நாயக்கன் சோழநாட்டு மன்னனுடன் (கோனேரிராயனுடன்) நிகழ்த்திய போர் பற்றி விவரிக்கின்றது.

மேலே கூறப்பெற்றுள்ள அனைத்து வரலாற்று ஆவணங்களையும் தொகுத்து நோக்கும் போது கோனேரிராயனைப் பற்றி இரண்டு விதமான மாறுபட்ட கருத்துக்கள் தெளிவாக உள்ளன. கோனேரிராயன் மிக ஆழமான அசைக்க முடியாத

வைணவ பக்தன் என்பது வெள்ளிடைமலை. திருமலை வேங்கடவனும், திருவரங்கத்து அழகிய மணவாளனும் அவனது உள்ளத்தில் நிறைந்தவர்கள் என்பதை திருமலை மற்றும் திருவரங்கத்து சாசனங்கள் உறுதி செய்கின்றன. திருவரங்கத்து கோயில் உரிமைகள் சிலவற்றை திருவானைக்காவலாருக்குக் கொடுத்தது, நால்வர் கோபுரம் ஏறி உயிர் துறந்தது, கந்தாடை இராமனுதாசன் முயற்சியால் நரசன் வந்தது ஆகிய நிகழ்ச்சிகளும் கற்பனையால் புனையப்பட்டதன்று. உண்மை நிகழ்ச்சிகளே. முரண்பட்ட, குழப்பமான இந்நிகழ்ச்சிகளுக்குப் பின்னணியில் ஒரு பெரிய வரலாற்றுப் பேருண்மை மறைந்து நிற்கின்றது. அதனை இனித் தெளிவாகக் காண்போம்.

**உயிர்த் தியாகத்தின் உண்மைக் காரணம்**

வைணவத்தின்பால் வெறுப்பு இல்லாத கோனேரிராயனின் நெருக்குதலுக்கு திருவரங்கம் கோயில் உட்பட்டது, பூசைகள் மற்றும் நில உரிமைகளில் தலையிட்டது ; பாதிக்கப்பட்டவர்கள் கோபுரமேறி உயிர்துறந்தது போன்ற காரணங்களுக்கு விளக்கம் தேட முற்படும் போது, திருவரங்கம் வரலாறு கூறும் நூலான கோயிலொழுகே விடை பகர்கின்றது. இதில் கந்தாடை இராமனுஜர் விஜயநகரப் பேரரசன் சாளுவ நரசிம்மனின் உடன் பிறந்தவர் என்பதும், இவர் வைணவ மதத்தலைவராக (ஒரு பிரிவினருக்கு) அரங்கத்தில் திகழ்ந்தவர் என்பதும் கோயிலொழுகின் கூற்றுக்களாகும்.

இந்நூலில் " ப்ரபண்ட தேவராயரை வீர நரசிங்கராயர் ஜயித்து கநகரி நகரத்திலிருந்து ராஜ்யபாரம் வகிக்கச்செய்தே அவருடைய தமையனான ராமராஜா ஸ்தலசாத்திரம் படித்து விரக்தராய் தீர்த்த யாத்திரை பண்ணி ஹநுமதுபாசனை பண்ணி திருவயோத்திக்குப் போய் ஸ்ரீராம மாடைகளையும் சபர்ஸ்வேதிகளையும் லபித்து வைராகி வேஷத்துடனே கநகிரிக்கு வந்து தம்பியான வீர நரசிங்கராயரை கண்டு, ஒரு ஸ்ரீராமமாடையும் கொடுத்து, தனக்கு நூற்றெட்டு திருப்பதிகளிலேயும் தேசாந்தரி முத்திரை நடக்கத் தக்கதாக ராயசாசனமும் நிருபமும் வாங்கிக்கொண்டு திருமலை பெருமாள் கோயிலிலேயும் ஸ்ரீராமமாடை சமர்பித்து அவ்விடத்தில் ஸ்தலங்களை எல்லாம் ராயசாசனப் படிக்கு ஸ்வாதீனம் பண்ணிக் கொண்டு சகாப்தம் ஆயிரத்து நானூற்றுப் பதினொன்றில் சௌம்மிய (1489) வருஷத்திலே திருவரங்கத் திருப்பதியிலே பெருமாளுக்கு ஒரு ஸ்ரீராமமடையும் சமர்பித்து கந்தாடையண்ணன் திருவடிகளிலே ஆஸ்ரயித்து விசேஷ நிஷ்டராய் சகல சாத்திரங்களையும் படித்து ஏகாங்கி வேஷம் தரித்து அண்ணன் சந்நதியிலே கந்தாடை ராமாநுஜதாசர் என்று தாஸ்ய நாமமும் பெற்று ராய சாசனப்படியே

ஏகாங்கிகளுக்கு தலைவராய் ஸ்தலத்திலே இருந்து ........ " என்று கந்தாடை இராமனுஜதாசர் பற்றி விரிவாகப் பேசுகின்றது.

கந்தாடைராமானுஜதாசர்

விஜயநகரப் பேரரசின் சங்கம குல மன்னனான பிரபுட தேவராயனை (ப்ரபண்ட தேவராயன்) சாளுவகுல வீர நரசிம்மன் வென்று விஜய நகரப் பேரரசனாக முடி சூட்டிக் கொண்டதை (கி.பி 1486) திருவரங்கத்து கோயிலொழுகு கூறி, அந்த சாளுவ வீர நரசிங்கராயரின் உடன் பிறந்தவராக *இராமராஜர்* என்பவரைக் குறிப்பிடுகிறது. இராமராஜா ஸ்தலசாத்திரம் படித்து விரக்தியுற்று, அயோத்திக்கு தீர்த்த யாத்திரை சென்று துறவறம் பூண்ட செய்தி யையும் விவரிக்கின்றது. அயோத்தியிலிருந்து மீண்டும் கநகிரிக்கு வந்து தம் தம்பியான விஜயநகரப் பேரரசன் சாளுவ நரசிம்மராயரை கண்டு தான் 108 வைணவத்திருப்பதிகளுக்கும் அரச முத்திரையோடு செல்ல இராய சாசனமும் நிருபமும் வாங்கிக் கொண்டதையும் கூறுகின்றது.

சக ஆண்டு 1411 ஆன கி.பி 1489 ல் விஜய நகரப்பேரரசனின் அண்ணனான இராமராஜா எனும் வைணவ அடியார் திருவரங்கம் வந்தார். கந்தாடையண்ணன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, ஏகாங்கி வேஷம் தரித்து " கந்தாடை இராமானுஜதாசர் " என்ற தாஸ்யநாமம் சூடிக் கொண்டு, விஜய நகர அரசு ஆணைப்படி திருவரங்கத்து வைணவ ஏகாங்கிகளுக்குத் தலைவராய் திருவரங்கம் கோயிலில் திகழ்ந்தார். இது கோயிலொழுகு கூறும் கி.பி 1489 ஆம் ஆண்டு நிகழ்ச்சியாகும்.

இராமராஜா (கந்தாடை ராமானுஜதாசர்) எனும் சாளுவ நரசிம்மனின் அண்ணன் திருவரங்கத்து ஏகாங்கிகளுக்கு தலைவராய் விஜயநகர அரசு நிருபப்படி பொறுப்பேற்றது சௌம்மிய ஆண்டு (கி.பி 1489) ஆகும். இதே ஆண்டு தைமாதம் நால்வர் திருவரங்கம் கோயிலுக்கு கோனேரிராயன் ஊறுவிளைவித்ததாய்க் கூறிக் கோபுரம் ஏறி விழுந்து உயிர்துறந்தனர். பின்னர், " இந்த சேதிகளெல்லாம் பலகாலும் நரசா நாயக்கருக்குக் கந்தாடை ராமானுஜதாசர் அறிக்கை பண்ணியதாக " கோயிலொழுகு குறிப் பிடுகிறது. தன் தம்பியான விஜயநகரப் பேரரசன் வீர நரசிம்மனின் படைத் தளபதியான நரசநாயக்கனைக் கோனேரிராயன் மீது படை எடுத்து வரும்படி தூண்டியவரும் இராமராஜா எனும் கந்தாடை ராமானுஜதாசரே.

இதுகாறும் கண்ட அனைத்து செய்திகளையும் நோக்கும் போது கோனேரிராயன் திருவரங்கன் மீது அளவிலா

பக்திஉடையவன் என்பது தெளிவு. தான் பேரரசனாக ஏற்றுக் கொள்ளாத சாளுவ நரசிம்மனின் அண்ணனான கந்தாடை இராமனுஜதாசருக்கும் இவனுக்கும் பகைமை உணர்வு ஏற்பட்டு, அதனால் இராமனுஜதாசரின் ஏகாங்கிகள் கோபுரம் ஏறி உயிர்துறந்திருக்க வேண்டும். தான் மதியாத மன்னனின் அண்ணன், சமயப் போர்வையில் தன் நாட்டில் இருந்துகொண்டு, சமய நடவடிக்கைகளில் ஈடுபடுவது கோனேரிராயனுக்கு, பிடிக்காமல் இருந்திருக்கலாம் அல்லது கந்தாடை இராமனுஜதாசர் தன் தம்பியின் எதிரியான கோனேரிராயனின் நாட்டில் அரசியல் குழப்பம் ஏற்பட சமயப்போர்வையில் முயன்றிருக்கலாம். எனவேதான் திருவரங்கத்து வைணவர் சிலருக்கு கோனேரிராயன் தொல்லைகள் தந்திருக்க வேண்டும். திருவரங்கத்தில் நிகழ்ந்த இந்நிகழ்ச்சிகள் அரசியல் பிண்ணனியில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளே அன்றி வைணவ விரோதத் தால் அல்ல என்பது உறுதியாகின்றது.

கோனேரிராயனுக்கு எதிர்ப்புத் தெரிவித்து கோபுரமேறி விழுந்து உயிர் துறந்தவர்களுக்கு, பின்பு கோபுரத்தில் உருவம் சமைத்து, கல்வெட்டு வெட்டியமையையும், கோனேரிராஜனின் தோட்டை சாமந்தனார் சென்றப்ப நாயக்கர் அனுபவித்த கிராமங்களின் எண்ணிக்கை போன்ற விபரங்களையும், கந்தாடை இராமானுஜதாசர் இராயரின் தமையனார் என்பது பற்றியும் கோயிலொழுகு தெளிவாகக் கூறுகின்றது.

" அதுமுதலாக வீரசுந்தரபிரம்மராயர் மதிளில் தெற்கு வடக்குக் கோபுரங்களும் புதிசாகக் கட்டிவைத்து, ஆயிரக்கால் மண்டபத்திலே தளத்திலே காரைசாந்து பாழாகிப் போகையில் காரைப்போட்டு சாந்து பண்ணியும், அகளங்கன் திருமதில் கீழ் கோபுரத்திலே துக்காவனத்துக்கு முன்னே இடிவிழுந்து பழகிசேதமாயிருக்கையில் பழைய அடிப்பாரத்துக்குள்ளே மட்டமாக அடிப்பாரமும் மேலும் எடுத்துக்கட்டி, குடவரையும் கோபுரமும் கட்டி, அதுக்குப் படியும் கட்டுவித்து, நிலைக்காலிலே கோனேரிராஜா நாளையில் அந்த கோபுரத்தில் ஏறிவிழுந்த ஜீயர்களையும், ஏகாங்கிகளையும் உருக்களடிப்பித்து, எழுத்தும் வெட்டுவித்து ....... " - என்றும்,

" அது முதலாக உடையவர் கல்பித்த தேசாந்திரி ஏகாங்கிகளிலே கந்தாடை ராமானுஜதாசன் அதீநமாக பட்டயமும் ஸ்ரீரங்க நாராயண ஜீயைரப் போல மடமும், ஸ்ரீரங்கராஜர் திருவாராதநமும், தேசாந்தரி வைராகிகளுக்கு முத்திரை போடு கிறதும், கோயிலிலே ப்ரஸாத பணியாராதி மடவரிசையாகப் பெற்றும் நடந்து வருகிறது. இவர் ராயருடைய தமையனாகையாலே, குல்லாவும், அதின்மேலே வைராக்ய வேஷத்துக்குத் தகுதியாக

சிரோவேஷ்டியும் கட்டினபடியாலே, அந்த அந்த ஆதீனத்துக்கு வந்தவர்கள் அப்படி கட்டுகிறதாக நடக்கிறது.

" இவர் கோட்டை சாமந்தனார் சென்றப்ப நாயக்கருள்ளிட்டார் குத்தகை கொண்டு நின்றதாய், கோனேரிராஜா அனுபவித்ததும் பலரும் ஒத்திப்பிடித்து அனுபவித்ததுமான ஊர்களை ஸ்ரீ பண்டாரத்திலே சேர்த்த கிராமங்கள் அறுபத்தொன்று " - என்றும் விவரிக்கின்றது.

கோனேரிராயனின் ஆட்சி எந்த ஆண்டு துவங்கியது, எப்போது முடிந்தது என்பதற்கான சான்றுகளும், அவனது கோட்டையும், ஆட்சியின் தலைமையிடமும் திருச்சிராப்பள்ளியில் திகழ்ந்தது என்பதற்கான குறிப்புகளும், திருவரங்கத்து உயிர்ப் பலிக்கான உண்மைக்காரணம் என்ன? என்பதற்கான விடைகளும் கோயிலொழுகை ஆழ்ந்து படிக்கும்போது தெளிவாகின்றன.

# சைவச் செம்மல்

திருவரங்கத்துக் கோயிலொழுகின் கூற்றால் கோனேரிராயனை வைணவ எதிரியாகவும், சைவத்தின் பால் பற்று மிகுந்தவனாகவுமே வரலாற்று ஆசிரியர்கள் கூறி வந்தனர். உண்மை நிலையை ஆராயும் போது இம்மன்னவன் சைவம், வைணவம் இரண்டையுமே தன்னிரு கண்களெனப் போற்றியவன் என்பது விளங்கும். இவனது கல்வெட்டுக்கள் அனைத்துமே சைவ, வைணவ கோயில்களுக்கு அளிக்கப்பட்ட அறக்கொடைகள் பற்றி பேசுபவையேயாகும்.

**பசவசங்கரன்**

கோனேரிராயனின் சிறப்பு விருதுகளுள் குறிப்பிடத்தக்கது, " பசவ சங்கர " என்பதாகும். இது இம்மன்னவனைச் சைவச் செம்மல் என வலியுறுத்தும் விருதுப் பெயராகும். " பசவசங்கர " - என்ற பெயர் கன்னட நாட்டிற்குரிய சிறப்புப்பெயராகும். கன்னட நாட்டில் வீரசைவ மரபைத் தோற்றுவித்தவர் பசவர் என்பவராவார். அவரை கி.பி 1163 ல் காலசூரி மன்னனான விசிசவன் என்பவன் ஆதரித்தான். பசவரின் உடன்பிறந்தவர் தேவராக முனியப்பா இவரது கொள்ளுப் பேரர் ஹாலபசவதேவர். இப்பெரியார் யாதவ கன்னர தேவனின் காலத்தில் வாழ்ந்தவர். இம்மன்னனது கன்னடக் கல்வெட்டொன்று பெல்காம் மாவட்டத்தில் அர்சுனவாடா என்னுமிடத்திலுள்ளது. (EP. Indica vol. XXI No. 92).

இக்கல்வெட்டின் காலம் கி.பி 1260 ஆகும். இதில் ஹாலபசவதேவர் கூறுவதாவது, "ஹாலபசவ தேவனாகிய யான் அறுபத்து மூன்று அடியார்களின் பாதகமலங்களை அர்ச்சிப்பவன், "எம்முடைய மூதாதையரும் வீரசைவ மதத்தைத் தோற்று வித்தவருமாகிய பசவர், அடியார்களின் பாதக் கமலங்களை அர்ச் சித்தவர். " - என்பதாகும். கி.பி 14, 15 ஆம் நூற்றாண்டுகளில் இவரது மரபினர் தமிழகத்தில் வீரசைவத்தைப் பரப்பியது வரலாறு கண்ட உண்மையாகும்.

பசவர் தோற்றுவித்த வீரசைவ மரபின் தாக்கம் கி.பி 15 ஆம் நூற்றாண்டில் தமிழகத்தில் சிறந்திருந்தது. அதே நேரத்தில் விஜய நகர மன்னர்களின் எழுச்சி மிகுந்த வைணவத் தாக்கமும் தமிழகத்தில் நிலை கொண்டிருந்தது. வீரசைவத்தின் பால் தனக்கு இருந்த மதிப்பின் காரணமாகவே கோனேரிராயன் தான் சூடிய விருதுப் பெயர்களுள் ஒன்றாக " பசவசங்கரன் " என்பதனைக் கொண்டான்.

திருவானைக்கா இறைவன் மீது இவன் பற்றுக் கொண்டவன்

என்பதனை கோயிலொழுகு கூறும் போது "ஆனைக்காவலருக்கு கோனேரிராஜா சஹாயம் பண்ணி மஞ்சள் பொடியிறைத்து விளையாடும் படி பண்ணுவித்தும் ..... " என்று கூறுகிறது. இம்மன்னவன் போற்றிய சைவ நெறி சிறப்பிற்குரியதாகும். இதனைக் கல்வெட்டுக்கள் திறம்படப் பேசுகின்றன. இம்மன்னனது முதற்கல் வெட்டே தஞ்சாவூர் மாவட்டம் திருப் புறம்பியம் சிவாலயத்தின் இராஜ கோபுரத்தில் தான் உள்ளது. திருப்புறம்பியமுடைய மகா தேவரின் பூசைகளுக்காகக் கோனேரிதேவமகாராஜர் சில வரிவிலக்குகள் அளித்த செய்தி கூறப்பெற்றுள்ளது.

கோனேரிராயன் மிகவும் போற்றிய சிவாலயம் திருச்சி மாவட்டம் திருமழபாடித் திருக்கோயிலாகும். இத்திருக் கோயிலில் மட்டும் இம்மன்னனது மூன்று கல்வெட்டுக்கள் உள்ளன. ஒரு கல்வெட்டில் சக ஆண்டு 1409 (கி.பி 1487 ல்) தமிழ் பிலவங்க ஆண்டு தைமாதம் 24 ஆம் நாள், இத்திருக் கோயிலுக்குரிய சில 'வரிகளை நீக்கம் செய்து, தன்பெயரில் மகாபூசையும், திருப்பணிகளும் செய்ய ஆணையிட்டதைக் கூறுகின்றது. இது மட்டுமின்றி இத்திருக் கோயிலின் இரண்டாம், மூன்றாம் கோபுரங்களுக்கு இடையே தன்பெயரால் ஒரு மண்டபத்தைக் கட்டுவித்தான். கயிலையம் பெருமான் திருக்கோயில் முன்பு தான் ஒரு கல்மண்டபமாக நிற்பதில் பெருமை கண்டான். இம்மண்டபம் " கோனேரிராயன் திரு மண்டபம் " என பெயர் தாங்கி இன்றும் எழிலுடன் நிற்கின்றது. திருமழபாடி திருக்கோயிலிலுள்ள நாயன்மார்களின் படிமங்களின் பூசைகளுக்காக தேவதான நிலமளித்ததோடு, இத்திருக்கோயிலின் பண்டாரமான " கோனேரிதேவராயன் பண்டாரத்தில் "முதலீடு செய்த செய்திகளையும் கல்வெட்டுக்களில் காணும் போது ; பைந்தமிழ்ப் பாடல்கள் பாடிய சைவசமயக் குரவர்களான நாயன்மார்கள் மீது இம்மன்னவன் கொண்டிருந்த பக்தியும், திருக் கோயில் பண்டாரம் கூட தன் பெயரில் செயல் படச் செய்த அவனது மாண்பும் நன்கு புலப்படும்.

திருமுட்டம் (ஸ்ரீமுஷ்ணம்) சிவாலயத்திற்குக் கோனேரிராயன் பெயரால் ஒரு கிராமம் அளிக்கப்பட்டது, உய்யக்கொண்டான் திருமலை விழுமிய தேவர்க்கு பல கொடைகள் நல்கியது, ஆகிய வற்றைக் காணும் போது விரிசடைப் பெருமானிடம் இவன் கொண்ட பேரன்பினை உணர முடிகின்றது. தஞ்சைத் தரணி யிலிருந்த சிவாலயங்களெல்லாம் இவனது ஆட்சியில் ஏற்றம் பெற்றன. சீர்காழி இறைவனுக்கு சர்வமானியமாக ஒரு கிராமத் தையே அளித்தான். சிறுத்தொண்டர் பிறந்த பதியான திருச் செங் காட்டங்குடி கோயிலுக்கு எண்ணிலாக் கொடைகளை நல்கி

திருவிழாக்களும் சிறப்புப் பூஜைகளும் நடை பெறச் செய்தான். இவனது ஆட்சிக் காலத்தில் தனி நபர் ஒருவர் செய்த சிவத் தொண்டினை பெருமையோடு குடந்தைக் கீழ் கோட்டத்துக் கூத்தனாரின் கோயிலில் கல்வெட்டாகப் பொறிக்கச் செய்தான். பந்த நல்லூர் பசுபதீஸ்வரரை பாங்குடன் போற்றினான். புள்ளிருக்கு வேளூரில் (வைத்தீஸ்வரன் கோயில்) தீராவினை தீர்த்தருளிய தம்பிரானாருக்கு கோயிற்பற்றாக நிலக்கொடைகளை நல்கினான். துக்காச்சி திருக்கோயிலில் கோனேரிராயனின் பிரதிநிதி ஒருவன், " பல்லக்கு சொக்கர் " திருமேனி செய்தளித்தமையை கல்வெட்டுக்களில் காணும் போது, இம்மன்னவன் காலத்தில் திருக் கோயில்களும், தமிழகத்து கவின்கலைகளும் போற்றப் பெற்ற நெறியை அறிகிறோம். காஞ்சிபுரத்திற்கு அருகில் உள்ள திருவோத்தூர் திருக்கோயிலில் செய்யப் பெற்ற கோனேரிராயனின் திருப் பணிகள் குறிப்பிடத்தக்கவையாகும்.

தென் ஆர்க்காடு மாவட்டம் விருத்தாசலம் தாலுக்காவிலுள்ள நல்லூர்க் கல்வெட்டில் சகம் 1415 ல் (கி.பி 1493 ல்) தோலியூரின் உட்கிராமமான திருப்பற்றை நல்ல நாயனார் என்றழைக்கப்படும் சிவபெருமானுக்காக சர்வமான்யமாக அளிததான். இத்தானம் கோனேரிராயன் பெயரில் மகநாட்களில் சிறப்புப் பூஜைகளுக்காக அளிக்கப்பெற்றதாகும். இதனை நோக்கும் போது இம்மன்னவன் மக விண்மீன் ஞான்று பிறந்தவனாக இருத்தல் கூடும். திருச்சி மாவட்டம் திருச்செந்துறை, தென் ஆர்க்காடு மாவட்டம் திட்டக்குடி போன்ற இடங்களில் உள்ள சிவால யங்களுக்கும் இம்மன்னவன் பல அறக்கொடைகள் நல்கினான் என்பதைக் கல்வெட்டுக்கள் பேசுகின்றன.

கோனேரிராயன் பல சிவாலயங்களுக்குத் தொண்டுகள் செய்தான் என்பதை வரலாற்றுச் சான்றுகள் நமக்கு உணர்த்து கின்றன. வைணவர்களில் சிலர் எதிரிகளாக இருந்தபோதும், வைண்வத் தைப் போற்றி மதித்த ஓர் நல்வைணவன் என்பதே கோனேரி ராயனின் தனிச் சிறப்பாகும்.

# நல்வைணவன்

பிறப்பால் சைவனாகப் பிறந்து வைத்தியநாதன் என்ற இயற்பெயர் பெற்றவன் கோனேரிராயன். இவன் வீரசைவ மரபில் போற்றப்பெறும் " பசவசங்கரன் " என்ற விருதும் சூடியவன். எண்ணிலாச்சிவாலயங்கள் இவன் ஆட்சியின் போது ஏற்றம் பெற்றன. இதே காலத்தில் திருவரங்கம் திருக்கோபுரமேறி நால்வர் உயிர் துறந்தனர். அவ்வைணவர்களின் உயிர்த்தியாகத்திற்குக் கோனேரிராயனின் செய்கைகளே காரணம் என்பது அரங்கத்துக் கோயி லொழுகு எனும் நூலின் கூற்று. கோயிலொழுகின் பார்வையில் கோனேரிராயன் வைணவ எதிரி ..! கொடுமையாளன் ..! ஆனால் வரலாற்றுப் பார்வையில் அவனொரு நல்வைணவன்.

திருவரங்கம் கோயிலின் இரண்டாம் திருச்சுற்றில் (பிரகாரம்) தெற்கு வாயிலில் கோபுரமொன்றுள்ளது. இவ்வாயில் சொக்கப் பானை வாசல் என அழைக்கப் பெறுவதாகும். அரங்கன் கோயி லுக்குரிய முக்கியவாயில்களுள் இது ஒன்றாகும். இவ்வாயிலின் கதவுகளை கோனேரிராயன் தன் கொடையாகச் செய்தளித்தான் என்பதை திருவரங்கத்துக் கல்வெட்டு கூறுகின்றது. இக்கல்வெட்டு அதே கோபுரத்தின் நிலைக்காலில் இன்றும் எழில் குன்றாமல் உள்ளது.

வைணவர்களுக்கு கோயில் என்றாலேயே திருவரங்கம் தான். பெருமை மிகு இப்பதியில் உறையும் திருவரங்கனுக்கு நாள்தோறும் உதயகாலத்தில் அமுது படைத்திட, கோனேரிராயன் விரும்பினான். ஒவ்வொரு நாளும் ஒரு தளிகை தயிர் அன்னம் (முசரோதரம்) பெருமாளுக்கு அமுது செய்திட வேண்டி பிச்சாண்டார் கோயில் எனும் ஊரில் மூன்று வேலி நிலம் அளித்துச் சந்திரன் சூரியன் உள்ளவரையும் இது தொடர்ந்திட ஆணையும் பிறப்பித்தான்.

இதனைக் கூறும் திருவரங்கத்துக் கல்வெட்டு " *பரிதாபி வரு மார்கழி மீ க உ கோனேரி தேவ மஹா இராசாவின் அவஸரம் ஆக நாளது முதல் உதைய காலத்திலே ஒரு தளிகை முசரோதரம் ஆக பெருமாள் அமுது செய்து அருளும் படிக்கு அவஸரகட்டளைக்கு செய்த பிச்சாண்டார் கோயில் விடுவேலி நிலம் ங-லி இந்த மூவேலி நிலத்தில் உபையமும் கொண்டு சந்திராதித்திய வரையும் அவஸர கட்டளை நடக்கக் கடவது ஆகவும்.* - என்று கூறுகிறது.

அரங்கனுக்கு சொர்க்க வாசல் கதவு அளித்து, உதைய கால அமுதும் அளித்த கோனேரிராயன் நல்வைணவன் அன்றோ ... !

திருவரங்கம் மட்டுமின்றி திருப்பதி திருமலை நின்றானுக்கும் அமுது படைத்துச் சேவை செய்தான். கோனேரிராயன் அரங்கனுக்கு அளித்தது ஓர் ஊரில் மூவேலி நிலம் மட்டும் தான். ஆனால் திருவேங்கடவனுக்கோ சோழ நாட்டு இரண்டு ஊர்களையே அளித்தான். அதன் வருவாயிலிருந்து நாள்தோறும் தன்பெயரால் அமுது படைக்க ஆணையிட்டான். மலை குனிய நின்றான் எனும் மரக்காலால் ஒரு மரக்கால் அமுது, நெய் அமுது ஆழாக்கு, கறியமுது, தயிரமுது ஆகியவற்றோடு பாக்கு 600 - ம், வெற்றிலை 1200 - ம் வைத்து அமுதுபடி செய்ய வேண்டும் என்றும், இது சந்திரன் சூரியன் உள்ளளவும் நிகழ வேண்டும் எனவும் விரும்பி கல்வெட்டும் இடம் பெறச் செய்தான் இக்கல்வெட்டு திருவேங்கடன் திருக்கோயில் இரண்டாம் திருச் சுற்றின் வடபுறச் சுவரில் உள்ளது.

இதே போன்று பந்த நல்லூர் ஆதிகேசவப் பெருமாள் திருக்கோயிலுக்குப் பல அறக்கொடைகள் நல்கியதை அங்குள்ள கல்வெட்டு விவரிக்கின்றது.

கோனேரிராயனின் சிவாலயக் கல்வெட்டுக்களையும், வைணவ ஆலயக் கல்வெட்டுக்களையும் ஒப்பிட்டு நோக்குங்கால் இம்மன்னன் வைணவ பக்தி மிகுந்தவன் என்பதைத் தெளிவாகக் காட்டுகின்றன. திருவரங்கத்து நிகழ்ச்சிகளெல்லாம் அரசியல் பகைமையால் நேர்ந்தவையே அன்றி சமயக்காழ்ப்புகளால் ஏற்பட்டவை அல்ல என்பதை முன்பே கண்டோம். திருவரங்கம் மற்றும் திருவேங்கடத்துக் கல் வெட்டுக்கள் இவனது வைணவ பக்தியை எடுத்துக் காட்டுவதால் கோனேரிராயனை நல்வைணவன் என்றே நாம் புகழ்வோம்.

'கோனேரிராயன் என்ற பெயர் ' வைணவப் பற்றைச் சுட்டிக் காட்டுவதாகக் கூறலாம். திருவேங்கடவனுக்கு இப்பெயர் உண்டு. இப்பெயர் கொண்ட குளம் (தீர்த்தம்) திருவேங்கட மலையில் உள்ளது. இப்பெயர்பற்றி " மன்னவன் பெயரில் " என்ற பகுதியில் விரிவாகக் காண்போம்.

# சிவிகையில் உலா

தமிழக வரலாற்றில் வாழ்வாங்கு வாழ்ந்து வரலாறு படைத்தவர்கள் பலர். சேர, சோழ, பாண்டிய, பல்லவ மரபு மன்னர்கள் விட்டுச் சென்றுள்ள கலைச் செல்வங்கள் தாம் எத்தனை ...! எத்தனை ... ! மன்னர்கள் தங்கள் உருவச் சிலையை எடுக்கும் மரபு பல்லவர் காலத்திலேயே தொடங்கிற்று. பெரும்பாலும் எல்லா மன்னர்களது உருவச் சிலைகளும் ஆலயங்களில் தான் இடம் பெற்றன. தன் படைவீரர்கள் புடைசூழ ஒரு மன்னன் உலாவரும் காட்சியைச் சிற்பத் தொகுப்பாகத் தமிழகத்தில் எங்கும் காணல் அரிது. ஆனால் கோனேரிராயன் தனது படைவீரர்களும், மங்கலச் சின்னங்கள் ஏந்தியவர்களும் புடைசூழ, தான் பல்லக்கில் பவனி வரும் காட்சிச் சிற்பத்தினை, காஞ்சியை அடுத்துள்ள திருவோத் தூரில் இடம் பெறச் செய்து தமிழகக் கலை வரலாற்றில் தனிஇடம் பெற்றுத் திகழ்கிறான்.

அரிய இக்காட்சிச் சிற்பத்தினை செய்யாறு *கிருஷ்ண மூர்த்தி* (தமிழ்நாடு அரசு தொல்பொருள் துறை) அவர்கள் 1978 ஆம் ஆண்டு கண்டு முதன் முதலாக வரலாற்று உலகுக்கு அறிமுகம் செய்தார்.

காஞ்சிபுரத்திற்கு தென்மேற்காக 19 கல் தொலைவில் செய்யாறு எனும் பேருரை ஒட்டி அமைந்துள்ள திருத்தலமே திரு வோத்தூர். இதனை திருவத்திபுரம், திருவத்தூர் என்றெல்லாம் அழைப்பர். கி.பி ஆறாம் நூற்றாண்டு முதலே வரலாற்றுச் சிறப் புடைய பேரூர்.. காழிப் பிள்ளையாம் ஞானசம்பந்தரால் பாடல் பெற்ற திருக்கோயில் உள்ள திருவூர்.

*" தாதார் கொன்றை தயங்கு முடியுடை*
*நாதா என்று நலம் புகழ்ந்*
*தோதா தாருள ரோதிருவோத்தூர்*
*ஆதீ ரே யருள் நல்குமே "*

என இத்திருக்கோயில் இறைவனைத் திருஞான சம்பந்தர் பரவுவார். இங்கு ஆண் பனை பெண் பனை ஆன வரலாற்றை

*" குரும்பை ஆண் பனை ஈன்குலை ஓத்தூர் "*

எனக் குறிப்பிடுவார்.

இவ்வாறு சைவம் கமழ்ந்த திருக்கோயிலாம் திருவோத்தூர் திருக்கோயிலின் திருமதிலினை கோனேரிராயன் கருங்கற் பணியாகச்

செய்தான். " கோனேரிராயன் திருமதில் " என இம்மதில் அழைக்கப் பெறுகின்றது. கி.பி 15 ஆம் நூற்றாண்டில் எடுக்கப் பெற்ற இம் மதிலில் திருஞானசம்பந்தப் பெருமானார் திருவோத்தூருக்கு எழுந் தருளுதல், அடியார்கள் அவரைச் சிவிகையில் அழைத்து வருதல், ஆண் பனை, பெண் பனையாக மாறி குலை ஈனுதல், சமணர்கள் கழுவேறுதல் போன்ற பல காட்சிகளைக் கோனேரிராயன் சிற்பமாக இடம் பெறச் செய்தான்.

கோனேரிராயன் தன் பெயரில் எடுத்த இத்திருமதிலில் உள்ள திருஞானசம்பந்த சுவாமிகள் புராணக் காட்சிகளை உற்று நோக்கும் போது தெய்வச் சேக்கிழார் சுவாமிகள் பாடிய,

*"தேவர் முனிவர்க்கு ஒத்தளித்தார் திருவோத்தூரில்*
*திருத்தொண்டர்*
*தாவில் சண்பைத் தமிழ்விரகர் தாம் அங்கணையக் களிசிறந்து,*
*மேவும் கதலி தோரணங்கள் விளக்கு நிரைத்து நிறைகுடமும்,*
*பூவும்*
*பொரியும் சுண்ணமும் முன் கொண்டு போற்றி எதிர்*
*கொண்டார் "* - 974

*சண்பை வேந்தர் தண்டரளச் சிவிகை நின்றும் இழிந்தருளி*
*நண்பின் மிக்க சீரடியார் சூழ நம்பர் கோபுரஞ் சூழ்*
*விண்பின் னாக முன்னோங்கும் வியன் பொற்புரிசை*
*வலங்கொண்டு*
*பண்பு நீடிப் பணிந்தெழுந்து பரமர் கோயிலுள்ளடைந்தார்.*
- 975

*"அங்கை அனலேற்றவர்க் கடியேன் ஆக்கும் பனைகளான*
*வெலாம்*
*மங்கு லுறநீண் டாண்பனையாய்க் காயாவாகக் கண்டமணர்*
*இங்கு நீரிட்டாக்குவன காய்த்தற் கடை வுண்டோ ? என்று*
*பொங்கு நகைசெய் திழித்துரைத்தார் அருள வேண்டும் "*
- எனப்புகல 978

*" விரும்பு மேன்மைத் திருக்கடைக் காப்பதனில் விமலர்*
*அருளாலே*
*குரும்பை ஆண் பனை ஈனும் என்றும் வாய்மை குலவுதலால்*
*நெருங்கும் ஏற்றுப் பனையெல்லாம் நிறைந்த குலைகளாய்க்*
*குரும்பை*
*அரும்பு பெண்ணை யாகிடக் கண்டோ ரெல்லாம்*
*அதிசயித்தார்* - 980.



திருஞானசம்பந்தர் சிவிகையில் திருவோத்தூர் வருகை

*" தென்னாட் டமண் மாசறுத்தார் தஞ்செய்கை கண்டு திகைத்தமணர்"* - *981*

என்ற திருப்பாடல்கள் எல்லாம் நம் நினைவிற்கு வரும்.

திருமழபாடிக் கல்வெட்டில் கோனேரிராயன் நாயன்மார்களின் படிமங்கள் எடுத்துப் பூசைசெய்ய நிவந்தம் அளித்த செய்தியை முன்பே கண்டோம். இங்கு சேக்கிழாரின் பாடல்கள் அப்படியே சிற்பவடிவம் கொண்டு திகழ்வதைக் காண்கிறோம். இவை இம்மன்னவனுக்குச் சமயக் குரவர்கள் மீது இருந்த பக்தி உணர்வையும், பெரிய புராணக் கதைகளின் மீதுள்ள நாட்டத்தினையும் வெளிப்படுத்துவனவாகத் திகழ்கின்றன. இச்சிற்பங்கள் அனைத்தும் தென்புற மதிலில் உள்ளன.

இதே மதிலின் மேற்குப்புறச் சுவரின் உட்புறம் (வெளிப் பிரகாரம்) மிக நீண்ட சிற்பத் தொகுப்பொன்று உள்ளது. சுமார் ஒரு அடிஉயர சிற்பங்களைத் தாங்கி நிற்கும் மிக நீண்ட இத் தொகுப்பில் தான் கோனோரிராயன் சிவிகையில் உலாவரும் காட்சி இடம் பெற்றுள்ளது.

ஆறு வீரர்கள் இடது கரத்தில் நீண்ட உடைவாளும், வலது கரத்தில் ஈட்டியும் சுமந்து முன் செல்கின்றனர். இதன் பின்னே கொடியேந்திய ஒருவன் செல்ல, அவன் பின்னே ஒருவன் எக்காளம் ஊதுகின்றான். இவர்களுக்குப் பின்னாக பட்டத்து யானை வேகமாகச் செல்கின்றது. யானை மீது மூவர் அமர்ந்துள்ளனர். மாவுத்தன் முன் செலுத்த, பின்னே தளபதி ஒருவனும், பணியாளன் ஒருவனும் அமர்ந்துள்ளனர். பவனிவரும் பட்டத்து யானைக்குப் பின்னதாக அழகான சிவிகை (பல்லக்கு) ஒன்றினை நால்வர் தோளில் சுமந்து வருகின்றனர். பல்லக்கின் வளைவுப்பகுதியில் அழகிய குஞ்சம் ஒன்று எழில் செய்கிறது. பல்லக்கில், தலைப்பாகை, மீசை மார்பில் புரிநூல், ஆகியவை எழில் செய்ய எடுப்பான தோற்றத்தோடு தலைவன் ஒருவன் அமர்ந்திருக்க அவனது உரிமை மகளிர் இருவர் அருகே உள்ளனர். பல்லக்கிற்குக் கீழாக இரண்டு வரிகள் கல்வெட்டுக்களாக உள்ளன. மேல்வரியில் " கோநேரிராயர் " என்று தெலுங்கிலும், கீழ்வரியில் " கோநேரிராயர் " என்று தமிழிலும் எழுதப் பெற்றுள்ளன.

இச்சிவிகைக் காட்சிக்குப் பின்னால் பாயும் குதிரைமீது ஒரு வீரனும், குதிரை அருகே தரையில் ஒரு வீரனும் உள்ளனர். இக்குதிரைக்குப் பின்னால் ஒட்டகம் ஒன்று வருகின்றது. அதன் முதுகில் அமர்ந்துள்ள வீரன் முரசு ஒன்றினை முழக்கிய வண்ணம் ஒட்டகத்தைச் செலுத்துகிறான். இக்காட்சிக்குப் பின்னதாக மூன்று பாயும் குதிரைகளோடு 6 வீரர்களும் வருகின்றனர்.



திருவோத்தூர் திருக் கோபுரம்



பல்லக்கில் பவனிவரும் கோனேரிராயன்
(பல்லக்கின் கீழ் கோனேரிராயன் என்ற எழுத்துப் பொறிப்பு உள்ளது)

பல்லக்கில் அமர்ந்துள்ள பெருவீரன் கோனேரிராயன் என்பதைக் கல்வெட்டுக்கள் உறுதி செய்கின்றன. எக்காளம் ஒலிக்க, முரசு அதிர, வெற்றிக் கொடி பறக்க பட்டத்து யானையோடு, ஒட்டகமும், குதிரைகளும் அணி வகுக்க பெரும் வீரர்களோடு சிவிகையில் உலா வரும் இக்காட்சிச் சிற்பம் தமிழக வரலாற்றில் தனி இடம் பெற்றுத் திகழ்கிறது. வாளும் ஈட்டியும் சுமந்து முன் செல்லும் வீரர்களின் உடையமைப்பு மற்றவர்களின் உடையமைப் பிலிருந்து மாறுபட்டுக் காணப் பெறுகின்றது. இவ்வீரர்களின் உடையமைப்பு, வடநாட்டு வீரர்களின் உடையமைப்பை ஒத்துள்ளதும், மற்றவர்கள் தமிழக உடையமைப்பையே கொண்டுள் ளமையும் புதுமையாக உள்ளன.

# இலக்கியம் காட்டும் போர்க்களம்

கல்வெட்டுக்கள், திருவரங்கத்துக் கோயிலொழுகு, விஜயநகரப் பேரரசின் வரலாறு ஆகியவற்றைத் தொகுத்து நோக்குவோமாயின் கோனேரிராயனின் ஆட்சி கி.பி 1496 ன் தொடக்கத்திலேயே முடிவுற்றது என்பதை அறியமுடிகிறது. சாளுவ நரசிம்மனின் தளபதி யான நரசநாயக்கன் பெரும்படையுடன் திருச்சிராப்பள்ளி வந்து கோனேரிராயனுடன் போரிட்டு, வென்றான். இந்த நிகழ்ச்சி வட மொழிப் படைப்பான " வரதாம்பிகா பரிணயம் " எனும் நூலில் சிறப்பாகக் கூறப்பெற்றுள்ளது.

**வரதாம்பிகா பரிணயம் : -**

வரதாம்பிகா பரிணயம் என்பது சமஸ்கிருத மொழியில் யாக்கப் பெற்ற சம்புகாவியமாகும்'. இதனை கி.பி 1529 - 1542 வரை விஜய நகரப் பேரரசின் மாமன்னராகத் திகழ்ந்த அச்சுதராயனின் (காதல்) மனைவியான திருமலாம்பா எனும் தேவியார் படைத்தார். திருமலாம்பா எனும் இத்தேவியார் அச்சுதராயரின் மனைவி என்பதனை, ஹம்பியிலுள்ள விட்டலா கோயிலில் அச்சுதராயர் அளித்த சுவர்ணமேரு தானம் பற்றி விவரிக்கும் கல்வெட்டுப் பாடலொன்று விவரிக்கின்றது.

' பெருமை மிகு அச்சுதராயர், கிருஷ்ண தேவராயரின் உடன் பிறந்தவர், நரசநாயக்கனின் புதல்வர் அச்சுதராயரின் தந்தையான நரசநாயக்கரே கோனேரிராயருடன் போரிட்டு வென்றவர். அச்சுதராயரின் புகழைக் கூற விழைந்த திருமலாம்பா, இச்சம் புகாவியத்தில் தன் மாமனாரின் வீரத்தையும் அழகுப்பாக்களால் விவரிக்கின்றார். இக்காவியம் நரசனின் சோழநாட்டுப் போரைச் சிறப்பாகப் பேசுகின்றது. சோழ நாட்டு மன்னன் (கோனேரிராயன்) எதிரியேயாயினும் அவனது வீரம் இங்கு சிறப்பிக்கப் பெறுகின்றது. '

# வரதாம்பிகை பரிணயம் சில பகுதிகளின் தமிழாக்கம்

"பட்டத்து யானையின் மேல் நரசன் அமர்ந்திருக்க, அவனது படைகள் புடை சூழ அம்பு மழை பொழிந்த வண்ணம் போர்க்களம் காட்சியளித்தது.

இக்காட்சி கதிரவன் கீழ்த்திசை மலைமீதமர்ந்து தன் ஒளி வெள்ளத்தால் இருளை விரட்டுவது போன்று இருந்தது.

அம்பு மழைபொழியும் அப்பரந்த வெளியில் எதிரே கடுமையாக மோதும் சோழநாட்டு மன்னனுடன் ஆதவன் போன்ற நரசன் கடும் சமரிட்டான்.

இது அந்தகனை அழித்த கயிலையம் பெருமானாகிய சிவபெருமான் ஜலந்தரனுடன் போரிட்டது போன்றும் ; இலங்கை வேந்தனுடன் இராமபிரான் போரிட்டது போன்றும் தோற்ற மளித்தது.

யார்தான் வெற்றித் திருமகளைத் தழுவுவது என்ற போட்டியில் இருபெரும் மன்னர்களும் பல்வகைப் போர்க் கருவிகளால் மிகக் கடுமையாக மோதிக்கொண்டனர்.

இரு மன்னர்களும் அமர்ந்திருந்த யானைகள் அவற்றின் உடல்களால் மோதிக்கொண்டதாலும் துதிக்கைகளால் தாக்கிக் கொண்டதாலும் களமெங்கும் தீப்பொறிகள் பறந்தன. வேழங்களின் மோதல்களால் ஒலித்த வேழமணியோசை போர்க்களத்தின் உச்ச நிலையை உணர்த்திய வண்ணம் இருந்தது.

களத்தைத் துச்சமெனக் கருதி தங்கமணிகள் ஒலியெழுப்ப மிக வேகமாக முன்னேறிக் கொண்டிருந்த சோழநாட்டு மன்னனின் (கோனேரிராயனின்) பட்டத்து யானையின் தலை மீது நரசன் வீசிய மழு பாய்ந்து ஊடுருவிச் சென்றது. இது குமரக் கடவுள் சக்தி யாயுதத்தால் கிரவுஞ்ச மலையைத் தாக்கியதற்கு ஒப்பாகத் திகழ்ந்தது.

அந்தி மயங்கும் வேளையில் செவ்வான வெளியில் விண்மீன்களென, சோழமன்னனின் பட்டத்து யானையின் மேல் அலங்கரிக்கப்பட்டிருந்த முத்துக்களெல்லாம் நரசனின் மழுவால் பீரீட்ட குருதியால் சிவந்தன.

சோழ மன்னனின் பட்டத்து யானையின் முடிவை கதிரவனின் மாலை மறைவு உணர்த்தியது.

வீரமுடன் போரிட்ட வேழம் மண்டியிட்டுச் சாய்ந்தது. துதிக் கை அசையவில்லை. கண்கள் மூடின. வேழம் வீழ்ந்ததும் பாம்பைப்

பிடித்த கருடன் போன்று, ஒரு சிங்கத்தை, ஒரு யானையை, ஒரு சிறுத்தையை, ஒரு மானை ஒத்த சோழமன்னனை (கோனேரிராயனை) நரசன் பிடித்துக் கைதியாக்கினான்.

இச்சம்புகாவியம் நரச நாயக்கனின் புகழை விரித்துரைத்த போதும், அம்மாவீரனுக்கு நிகராகப் போரிட்ட சோழநாட்டு மன்னன் கோனேரிராயனின் வீரத்தினை எடுத்துக் காட்டுகின்றது. திருமலாம்பாவின் பாக்களில் அவன் ஒரு சிங்கமாக, யானையாக, சிறுத்தையாக, அழகிய மானாகக் கூறப்பெற்றிருக்கும் பாங்கும் இங்குச் சிந்திக்க தக்க ஒன்று. இக்காவியத்தின் வாயிலாகக் கோனேரிராயனின் பட்டத்து யானை பட்டமையையும் இம்மாவீரன் சிறைப் பட்டமையும் அறிகிறோம்.

**அச்சுதராயாபுதயம்[2]**

வரதாம்பிகா பரிணயம் போன்றே வடமொழியில் எழுதப் பெற்ற மற்றொரு வரலாற்றுக் காவியம் அச்சுதராயாபுதயமாகும். இதனை இராஜநாதகவி என்பார் இயற்றினார். நரசநாயக்கனின் புதல்வரான அச்சுதராயர் எனும் விஜய நகரப் பேரரசரின் வீரத்தையும் புகழையும் விரித்துரைக்கின்றது இந்நூல். நமது கோனேரிராயனின் பெயரைக் குறிப்பிடும் ஒரே நூலும் இதுவாகும்.

அச்சுதராயனின் புகழ்பேசும் இக்காவியம் அவரது தந்தையான நரசிம்மனின் (நரச நாயக்கன்) வீரத்தினையும் திறம்பட உரைக்கின்றது. இதனைக் கூறுமிடத்து சந்திர குலத்தில் திகழ்ந்த திம்மா என்ற மன்னனுக்கு ஈஸ்வரன் என்பான் மகவாய் உதித்ததாகவும், அவன் பெரு வீரன் என்றும், பகைவர்களை ஒடுக்கியவன் என்றும் விவரிக்கின்றது. பக்கம்மா என்ற தேவியின் மூலம் இவனுக்கு ஈஸ்வரனும், நரசிம்மனும் மகவாய் பிறந்தார்கள் என்றும் ; அவர்களில் நரசிம்மன் இளமையிலேயே பெருவீரனாகத் திகழ்ந்தான் என்றும் கூறுகின்றது. நரசிம்மன் மாளவ துர்க்கத்தையும், ஸ்ரீரங்கப் பட்டணத்தையும் கைப்பற்றிய நிகழ்ச்சிகளும், காவிரியை கடக்க பாலம் அமைத்த நிகழ்ச்சியும், மதுரையையும் சோழநாட்டையும் வென்ற நிகழ்ச்சிகளும் விரிவாகப் பேசப் பெறுகின்றன. இப்பெரு வெற்றிகளைக் குறிப்பிடும் போது கோனேரிராயனின் யானைப் படையுடன் மோதி நரசன் பெற்ற வெற்றியை,

*" குதா பதந்தம் ஸவர குஞ்சரௌகை :*
*கோனேட்டிராஜம் க்ஷிபிதான்யஸைன்ய : !*
*ஜக்ராஹபாணௌ ஜகதேக வீரோ*
*ஜயாப்தி கன்யாமபி ஜன்யபூமௌ !!*

*- (சுலோகம் 33)*

என்று விவரிக்கின்றது.

" கோனேட்டிராஜன் " - என்று தெலுங்கு மரபில் கோனேரி ராயன் குறிக்கப் படுகின்றான். இராஜநாதகவியின் வாக்கால் கோனேரிராயனின் யானைப் படையின் பலம் பற்றி நாம் அறிகிறோம்.

தெலுங்குக் காவியத்தில் .....

விஜய நகரப் பேரரசர் கிருஷ்ணதேவராயர் காலத்தில் வாழ்ந்த பெரும் புலவர் முக்கு *திம்மண்ணா* என்பவராவார். இவர் யாத்த " *பாரிஜாத பஹரணம்* " எனும் நூலில் கிருதிவம்சாவளி எனும் பகுதியில், நரச நாயக்கனின் வெற்றிகளைப் புகழ்கின்றார். இதில்,

*" குந்தலேஸ் வருடு சிக்கு வடங்க விதயாபு*
*ரம்பு கைகொனி நிஜப்பெரளிடி நெரபெ*
*பாரஸீகுனகு தூர்பர மர்னவத் வம்பு*
*தொலர கிஞ்செ மானவ துர்கஸீம்*
*சோழ வல்லபுனகு ஸீரவதூ மதுராத*
*ரமு லிச்சி மதுரா புரம்பு கொனியெ "*

## தமிழாக்கம்

குந்தல தேசத்து மன்னனைப் பிடித்து, வித்யாபுரத்தை கைப்பற்றி தன் ஆற்றலை வெளிப்படுத்தினான். பாரசீகனின் (முகலாயர்கள்) திமிரை அடக்கி, சோழ மன்னனுக்குக் கோட்டையை அளித்து பாண்டியனின் மதுரையைக் கைப்பற்றினான் என்று சுந்தரத் தெலுங்கினில் பாடியுள்ளார். எனவே கோனேரிராயனை வெற்றி கண்ட பின்பு மீண்டும் அவனது கோட்டையைக் கொடுத்த செய்தி இவ்விலக்கியத்தில் குறிக்கப் பெற்றுள்ளது.

குறிப்புகள்

1. Varadambika Parinaya Campu
Edited by Prof. Surya Kanta
Chowkhamba Sanskrit Series office
Varanasi - 1. 1970.
Page - 48 - 50

2. Sources of Vijayanagar History,
S. Krishnasamy Iyangar,
University of Madras - 1919.
Page 108.

# மன்னவன் பெயரில் ......

கோனேரிராயன் : -

" ஊனேறு செல்வத் துடற்பிறவி யான் வேண்டேன்
ஆனேறேழ் வென்றான் அடிமைத் திறமல்லாமல்
கூனேறு சங்கம் இடத்தான் தன் வேங்கடத்து
கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே "

என்று வடவேங்கடத்து திருமலையில் உள்ள புட்கரணியைக் குல சேகராழ்வார் (பழமை ஆழ்வார்) பாடும் போது " கோனேரி " என்று குறிப்பிடுகின்றார். இன்றும் திருமலைத் திருக்குளம் " கோனேரி " என்ற பெயரால் தான் அழைக்கப் பெறுகின்றது. தாளப் பாக்கம் அன்னமய்யா திருவேங்கடவன் மீது எண்ணிலாப் பாடல்கள் பாடியவர். இவர் கி.பி 15 ஆம் நூற்றாண்டின் பிற் பகுதியில் வாழ்ந் தவர். திரு வேங்கடவனைத் தெலுங்கில் " கோனேட் டிராயா " என்றே அழைத்துப்பாடுகின்றார். எனவே " கோனேரி ராயன் " என்பது திருவேங்கடவனைக் குறிப்பிடும் சிறப்புப் பெயர்களுள் ஒன்று என்பதும் புலனாகின்றது.

சோழர் கல்வெட்டில் கோநேரி :

காஞ்சிபுரம் சொக்கீஸ்வரர் திருக்கோயில் தென்புறச்சுவரில் உள்ள உத்தமசோழன் காலத்தியதாகக் கருதப்படும் கல்வெட்டில், " காஞ்சிபுர மாநகரத்தோம் இந்நகரத்தில் கோநேரியார் எல்லைக்குத் தெற்கு ......" "இந்நகரத்து கடும்பிடுகு மேற்காப்பில் கரிகாலப் பிள்ளையாற்கு திருவமுதுக்கு மாநகரத்தோம் விற்றுக் குடுக்கிற நிலமாவது வடபாற்கெல்லை கோநேரியார் நிலத்திற்கு தெற்கும் .... " என்ற குறிப்புகள் காணப்படுகின்றன. கோநேரியார் என்று இங்கு குறிப்பிடப் பெற்றிருப்பது இறைவனது பெயர் அல்லது தனிநபரின் பெயராகும்.

குலசேகர ஆழ்வாரின் பாடலில் காணப்பெறும் இச்சொல்லாட்சி, சோழர்கால பெயர் வழக்காகத் திகழ்ந்துள்ளது.

தமிழக மன்னர்களான சோழர்களும் பாண்டியர்களும் தங்களது " ஸ்ரீமுகம் " என்னும் நேர்முக ஆணைகளைக் கல் வெட்டில் பொறிக்கும் போது மன்னனது பெயரைக் குறிப்பிடாமல் " கோநேரின்மை கொண்டான் " என்றே குறிப்பது மரபு. தனக்கு ஒப்புமைஉடைய மன்னன் யாரும் இல்லை என்ற பொருளில் அவ்வாறு குறித்தனர். ஆனால் சோழ, பல்லவ, பாண்டிய மன்னர்கள் யாரும் தங்களை, " கோனேரிராயன் " என்று குறிப்பிட்டுக் கொள்ள

வில்லை. கி.பி 15 ஆம் நூற்றாண்டில் கோனேரிராயனுக்கு சமகாலத்தில் திருமலையில் வாழ்ந்த அன்னமய்யா திருமலை வேங்கடனை " கோனேட்டிராயா " (கோனேரிராயா) என்று அழைத்துப் பாடிய அதே காலகட்டத்தில் ; அதே திருவேங் கடவனுக்கு கோனேரிராயன் தன் பெயரால் நாள்தோறும் அமுதுபடி செய்ய சோழமண்டலத்து ஊர்களான மருத்துவக்குடி, வாழைக்குலைச் சேரி ஆகிய கிராமங்களை அளித்த செய்தி திருமலை திருப்பதி வேங்கடவன் கோயில் தமிழ்க் கல்வெட்டால் அறியலாம். இக்கல்வெட்டில் மிக அரிய செய்தி ஒன்று குறிக்கப் பெற்றுள்ளது. அதில் யார் பெயருக்கு அமுதுபடி செய்யவேண்டும் என்று குறிப்பிடுகையில் " திருவேங்கட முடையான் கோனேரிராஜாவின் பேராலே என்று " குறிக்கப்பட்டுள்ளது. எனவே திருவேங்கடவனின் திருநாமமான " கோனேரிராஜா " என்பதை இவன் உகந்து தன் பெயராகச் சூட்டிக்கொண்டான் என்பதறிகிறோம்.

### பழமை மரபு

மாமன்னர்கள் தங்கள் பெயர்களையோ அல்லது தாம் பெற்ற விருதுகளையோ தாங்கள் வென்ற நாட்டின் தலை நகருக்கோ, தம் நாட்டு பகுதிகளுக்கோ ஊர்களுக்கோ வழங்குவது மரபு. இவ் வகையில் பல்லவ மன்னன் சிம்ம விஷ்ணு பெயரில் சிம்ம விஷ்ணு சதுர்வேதி மங்கலம், மகேந்திர பல்லவன் பெயரில் மகேந்திரவாடி, நந்திவர்ம பல்லவன் பெயரில் நந்திபுரம், இராஜ இராஜனின் விருதுப் பெயர்களில் "ஜனநாத மங்கலம்" , க்ஷத்திரிய சிகாமணி வளநாடு, அருண்மொழி தேவ வளநாடு என்றெல்லாம் பெயர்கள் உள்ளமையைக் கல்வெட்டுகளும், செப்பேடுகளும் எடுத்துக் காட்டுகின்றன. 15 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தமிழகத்தில் ஆட்சிசெய்த சாளுவதிருமலைய்ய தேவ மகாராயன் பெயரால் தஞ்சாவூர் மாவட்டத்தில் திருமலை ராஜன்பட்டினம் எனும் ஊரும், திருமலை ராஜன் ஆறு என்ற காவிரியின் கிளை நதியும் பழையாறையில் திருமலைராஜன் குளமும் உள்ளன. இம்மரபை ஒத்து கோனேரிராயன் பெயரிலும் பல இடங்களுக்குப் பெயர்கள் ஏற்பட்டன.

### திருநல்லம் - கோனேரிராஜபுரம் : -

தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்ப கோணத்திற்கு அருகில் அமைந்த ஊர் கோனேரிராஜபுரம். இவ்வூரின் பழம்பெயர் திருநல்லம் என்பதாகும்.

*" கல்லால் நிழல் மேயக் கறைசேர் கண்டா வென்*

*றெல்லா மொழியாலும் இமையோர் தொழுதேத்த*

*வில்லால் அரண் மூன்றும் வெந்து விழவெய்த*

*நல்லான் நமையாள்வான் நல்லம் நகரானே "*

என்று திருஞானசம்பந்தரும்.

*" மாதராரொடு மக்களும் சுற்றமும்*

*பேதமாகிப் பிரிவதன் முன்னமே*

*நாதன் மேவிய நல்லம் நகர்தொழப்*

*போதுமின் ! எழுமின் புகலாகுமே "*

- என்று திருநாவுக்கரசரும் போற்றும் பெருமை வாய்ந்தபதி திருநல்லம் நகராகும். இத்தேவாரப் பாக்கள் வாயிலாக இவ்வூரின் தொன்மைச் சிறப்பை நன்கறியலாம்.

சோழப் பெருமன்னர்கள் காலத்தில் பல சிறந்த வரலாற்று நிகழ்ச்சிகளை இவ்வூர் கண்டுள்ளது. சோழப் பேரரசி செம்பியன் மாதேவியார் தம் கணவர் கண்டராதித்தரின் நினைவாக கற்றளி ஒன்றை இவ்வூரில் எடுப்பித்தார். இக்கற்றளியில் கி.பி 14 ஆம் நூற்றாண்டு வரை பொறிக்கப்பட்ட கல்வெட்டுக்கள் அனைத்தும் இவ்வூரைத் திருநல்லம் என்றே குறிப்பிடுகின்றன.

திருநல்லம் என்ற பெயர் ஏன் 15 ஆம் நூற்றாண்டில் கோனேரி ராஜபுரமாக மாறிற்று ? இவ்வாறு மாற்ற, காரணமாய்த் திகழ்ந்த கோனேரிராயன் யார் ? என்ற வினாக்களுக்கு விடை தேட முயன் றால், அது நமது கோனேரிராயன் தான் என்பதில் ஐயமில்லை. ஏனெனில் இப்பெயரில் இதற்கு முன்போ, பின்போ எந்த ஒரு மன்னனும் தமிழகத்தில் வாழ்ந்ததாகச் சான்று இல்லை.

தேவாரப் பாடல்கள் பெற்ற பழம்பதி, பொன்னிநதிக் கரையில் அமைந்த பொலிவு மிகுந்த ஊர், செம்பியன் மாதேவியார் கட்டுவித்த எழிலார்ந்த கற்றளி உலகிலேயே மிக உயரமான ஆடல்வல்லான் திருமேனி திகழும் திருக்கோயில் போன்ற எண்ணிலடங்காத பெருமைகளுடன் திகழ்ந்த இத்திரு நல்லத்துடன் தனது பெயரையும் இணைத்துக் கொள்வதில் பெருமை கண்டான் கோனேரிராயன். எனவே திருநல்லம் கோனேரி ராஜபுரமாக மாறியது.

கோனேரிராஜபுரம்

தஞ்சாவூர் மாவட்டத்தில் குடமுருட்டியாற்றின் தென்கரையில் கண்டியூர் செந்தலை சாலையில் கோனேரிராஜபுரம் எனும் சிற்றூர் ஒன்று இம்மன்னவன் பெயரில் திகழ்கிறது. கொள்ளிடத்தின் வடகரையில் உள்ள திருமழபாடி இவ்வூருக்கு அருகில் அமைந் துள்ளது. இவ்வூரின் பழம்பெயர் யாது என அறியப் போதுமான

சான்றுகள் இதுகாறும் கிடைக்கவில்லை. சோழநாட்டில், தஞ்சைமாவட்டத்தில் கோனேரிராஜபுரம் என்ற பெயரில் இரு ஊர்கள் திகழ்வது குறிப்பிடத்தக்கது ஆகும். இவ்வூரின் அருகமைந்த திருமழபாடியில் இம்மன்னனது பல கல்வெட்டுக்கள் இருப்பதும், கோனேரிராஜன் பண்டாரம், கோனேரிராஜன் திருமண்டபம் ஆகியைவ இருந்தமை கொண்டு நோக்கும் போது இப்பகுதி கோனேரிராயனால் ஆக்கம்பெற்ற வளநாடு என்பது தெளிவாகின்றது.

**கோனேரிப் பாளையமும் கோனேரிக்குப்பமும்**

திருச்சிமாவட்டம் பெரம்பலூர் தாலுக்காவில் கோனேரிப் பாளையம் என்ற பெயரில் ஒரு சிற்றூர் இன்றும் உள்ளது. இதே போன்று தென் ஆற்காடு மாவட்டம் கடலூர் தாலுக்காவில் கோனேரிக் குப்பம் என்ற ஊரும் உள்ளது. இவையாவும் கோனேரி ராயனின் ஆளுகையின் கிழ் இருந்த பகுதியில் உள்ள ஊர்கள் என்பதும் நோக்குதர்க்கு ரியவையாகும்.

**கோனேரிராயன் குளம் : -**

திருவோத்தூருக்கு வடக்கிலுள்ள செய்யாறு பேட்டையில் " கோனேரிராயன் குளம் " என்றதோர் நீர்நிலை இன்றும் உள்ளது. இதுவும் இம்மன்னவன் புகழ்பாடும் நிலைத்த சான்றேயாகும். திருவோத்தூர் திருமதில் " கோனேரிராயன் திருமதில் " என்றும், அதில் அம்மன்னன் சிவிகையில் உலாவரும் காட்சிச் சிற்பங்கள் இருப்பதையும் முன்னரே கண்டோம். வடதமிழகம் வரை இவன் புகழ் சிறந்து இருந்தது என்பதற்கு இவைகள் சிறந்த எடுத்துக் காட்டுகளாகும்.

**கோனேரிராயன் திருமண்டபம் : -**

திருமழபாடி வைத்தியநாத சுவாமி திருக்கோயிலின் இரண்டாம் திருச்சுற்றில் இரண்டாவது, மூன்றாவது கோபுரங் களுக்கு இடையில் வடக்கு தெற்காக அமைந்துள்ள திருமண்டபமே கோனேரிராஜன் திருமண்டபமாகும்.

இம்மண்டபம் வரிசைக்கு எட்டுத் தூண்களாக, மொத்தம் ஆறு வரிசைகளில் நாற்பத்தெட்டு தூண்களுடன் திகழ்கிறது. அதிஷ்டானத்தின் உயரம் எழுபத்து மூன்று அங்குலங்களும், ஜகதி 10 அங்குலங்களும், முப்பட்டை குமுதம் 10 அங்குலங்களும், கூடு 12 அங்குலங்களும், யாளவரி 7 அங்குலங்களும், கண்டம் 13 அங்குலங்களும் உள்ள அளவுகளுடன் கருகற் கட்டுமானமாய் அமைந்துள்ளது. இம்மண்ட்பத்தின் நீளம் 50.6 அடிகளும் அகலம் கிழக்கு மேற்காக 50.6 அடிகளும் கொண்டு திகழ்கிறது.

இம்மண்டபத்தின் கிழக்குச் சுவரில் உள்ள கல்வெட்டு சகம் 1412 ல் (கி.பி 1490 ல்) " *கோனேரிராஜன் திருமண்டபம்* " என்ற பெயரில் இம்மன்னனால் எடுக்கப் பெற்றது என்ற செய்தியை குறிக்கிறது. இதே மண்டபத்தின் தென்மேற்கு மூலையில் உள்ள கல்வெட்டு சகம் 1404 ல் (கி.பி 1482 ல்) *வைத்தியநாத காலிங்கராயன்* எனும் கோனேரிராயன் " *கோனேரிராயன் பண்டாரத்தில்* " முதலீடு செய்த அறக்கொடை பற்றி விவரிக்கின்றது.

**நரசநாயக்கபுரம் : -**

கோனேரிராயனுடன் போரிட்டு வென்ற நரச நாயக்கன் பெயரிலும் தஞ்சாவூர் மாவட்டத்து ஊர் ஒன்று திகழ்கிறது. தஞ்சை கும்பகோணம் பெருவழியில் தஞ்சையில் இருந்து 8. கி. மீட்டர் தொலைவில் வயலூர் எனும் ஊர் உள்ளது. இதற்கு நரச நாயக்கபுரம் என்று பின்னாளில் (15 ம் நூற்றாண்டுக்கு பிறகு) பெயர் மாற்றம் ஏற்பட்டு இன்றளவும் இதேபெயரால் அழைக்கப் பெறுகின்றது. வரலாற்று நாயகர்களாகத் திகழ்ந்தவர்களின் பெயர்களெல்லாம் ஊர்களுக்குத் திகழ்வது தமிழகத்தின் தனிப் பெருமையல்லவா ... !

# கோனேரிராயன் காசுகள்

தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி தென் ஆர்க்காடு மாவட்டங்களில் கிடைக்கும் பழங்காசுகளில் குறிப்பிடத்தக்கவை " கோனேரிராயன் " எனும் பெயர் தமிழில் பொறிக்கப்பட்ட காசுகளேயாகும். இவை செப்புக் காசுகளாகவே உள்ளன. இவை ஒரே வகையாக அமையாமல் சில மாறு தல்கள் பெற்றும் உள்ளன. இவ்வகைக் காசுகளில் ஒரு வகையினை முதன் முதலாகச் சென்ற நூற்றாண்டில் சர் வால்டர் எலியட் எனும் நாணய இயல் ஆராய்ச்சியாளர் தம் ' தென் இந்தியக் காசுகள் ' எனும் நூலில் வெளியிட்டார். அவரது குறிப்பு

**COINS OF SOUTHERN INDIA**

**- Sir Walter Elliot**

Page 152 H.
No. 173
Copper : obv : Standing Bull facing to left, lamp in front.
Rev : - Koneri rayan - who he was not known

சர் வால்டர் எலியட் அவர்கள் கூற்றுப்படி இக்காசுகளின் ஒருபக்கம் இடப்புறம் நோக்கும் எருது, அதன் முன்னர் விளக்கு உருவம் ஆகியவை இருப்பதாகவும், மறுபுறம் கோனேரிராயன் என்ற எழுத்துக்கள் உள்ளதாகவும் குறிப்பிட்டு, இந்த் கோனேரிராயன் யார் என்று அறிய முடியவில்லை என்றும் கூறியுள்ளார்.

அடுத்து T. திவான் பகதூர் தேசிகாச்சாரி அவர்கள் தம் " தென் இந்திய காசுகள் " - எனும் நூலில் இதே கோனேரிராயன் என்ற எழுத்து பொறிப்புகள் உள்ள இரண்டு வகைக் காசுகளை பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

**SOUTH INDIAN COINS**

77 A.E.
Obverse : - Bull passant facing The left with a dagger in front.
Resverse : - Tamil legend KONERIRAYAN

78 A.E
Obverse : - Bull passant To The left bearing The State Umbrella
Resverse : - The Tamil legend Konerirayan a dagger separating the legend.

ஒரு வகைக்காசுகளில் கோடினரிராயன் என்ற பொறிப்பு ஒருபுறமும் மறுபுறம் எருது உருவமும் குத்துவாளும் இருப்பதாகவும், மறுவகை காசுகளில் கோனேரிராயன் என்ற எழுத்துக்களுக்கு நடுவாக ஒரு குத்துவாளும், பின்புறம் எருதுடன் வெண்கொற்ற குடையும் உள்ளதாகக் குறிப்பிடுகிறார்.

பாண்டியர்களுடைய காசாக வகைப்படுத்தி இவ்விரண்டு வகையான காசுகளைக் குறிப்பிடுகிறார். முன்பு திரு வால்டர் எலியட் குறிப்பிடும் போது நிற்கும் எருதிற்கு முன்பு குத்துவிளக்கு எனத் தவறாக குறிப்பிட்டதை திரு தேசிகாச்சாரி அவர்கள் குத்துவாள் என்று கண்டுள்ளார். மேலும் இவை விஜயநகரக் காசுகளை ஒத்துள்ளதாகவும் குறிப்பிடுகிறார்.

திரு T.தேசிகாச்சாரி அவர்களின் ஆய்வுகளுக்குப் பின்பு அண்மையில் வாரணாசியிலுள்ள தி நியுமிஸ்மாடிக் சொசைட்டி ஆப் இந்தியா எனும் நிறுவனம் வெளியிட்டுள்ள " COINS OF PANDIAS' (பாண்டியர்களின் காசுகள்) எனும் நூலில் சி. ஹைச். பிடல்ப் என்ற அறிஞர் இதே காசுகளைக் குறிப்பிட்டு, அவை பாண்டியர்களால் வெளி யிடப் பெற்றவை என்று கூறி விஜயநகரக் காசுகளை ஒத்திருப் பதாகவும் கூறுகிறார்.

திரு T. தேசிகாச்சாரியார், திரு சி. ஹைச் பிடலாப் போன்ற அறிஞர்களின் கருத்துக்களுக்கு உடன்படாத இந்நூலாசிரியர் இக்காசுகளில் காணப்படும் எழுத்தமைதி 13 ஆம் நூற்றாண்டு எழுத்தமைதி அல்ல என்றும், இவை கி.பி 15 ஆம் நூற்றாண்டு தமிழ் எழுத்துக்களே என்ற கருத்தை வலியுறுத்தி அப்போது தமிழகத்தில் சோழநாட்டின் கண் திகழ்ந்த கோனேரிராயன் என்ற தலைவன் வெளியிட்ட காசுகளே இவை என்ற கருத்தோடு 1977 ஆம் ஆண்டு நவம்பர் 6ஆம் நாள் தினமணி நாளேட்டிலும், அதே ஆண்டு டிசம்பர் திங்கள் 18ஆம் நாள் இந்தியன் எக்ஸ்பிரஸ் நாளேட்டிலும் " 15 ஆம் நூற்றாண்டு தமிழ் நாணங்கள் ", History from a Coin " என்ற தலைப்புக்களில் ஆய்வுக் கட்டுரைகளை எழுதியிருந்தார். அன்றைய நிலையில் அவனது முழு வரலாறும் அறியப் படவில்லை. ஆனால் இக்காசில் உள்ள கோனேரிராயன் யார் என்பதை ஆராய முற்பட்டதால் தான் இன்று இந்நூலில் உள்ள அளவு அவனது வரலாற்றைக் காண முடிந்தது.

இங்கு, குறிப்பிட்டுள்ள இதே வகைக்காசுகள் இந்நூலா சிரியருக்குத் தஞ்சை மாவட்டத்தின் பல பகுதிகளில் இருந்து கிடைத்தன. இதே போன்று நாணயச் சேகரிப்பாளர்களிடம் கோ னேரிராயனின் பலநூறு காசுகள் கிடைத்துள்ளன. அதில் அதிக

அளவு கிடைக்கும் முதல் வகைக் காசுகளைப் பற்றி இங்குக் காண்போம்.

முதல் வகைக் காசுகளில் ஒருபக்கம், ஒரு வட்டம் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப் பெற்றுள்ளது. மேல் பகுதியில் " கொ " என்ற எழுத்தும், இடைப் பகுதியில் " னெரி " என்ற எழுத்துக்களும், கீழ் பகுதியில் " ராயன " என்ற எழுத்துக்களும் காணப்பெறுகின்றன. இதே காசுகளின் மறுபக்கம் இடதுபுறம் நோக்கியுள்ள எருது, அதன் முன்பு கீழ் நோக்கியுள்ள குத்துவாள் ஆகியவை உள்ளன. எருதிற்கு பின்புறம் மேலாக பிறைச் சந்திரன் காணப்பெறுகின்றது.

இரண்டாம் வகைக் காசுகளில் முதல் வகையில் கண்டது போல ஒருவட்டம் மூன்று பிரிவுகளாக பிரிக்கப் பெற்று " கொனெரிராயன் " என்ற பெயரும் அதன் இடையே ஒரு குத்து வாளும் பின்புறம் நிற்கும் எருதும் அதற்கு மேலாகக் குடை ஒன்றும் உள்ளன.

திரு அளக்குடி ஆறுமுக சீதாராமன் தம்மிடம் நான்கு வகையான கோனேரிராயன் காசுகள் இருப்பதாகவும் இவை பல்வேறு அளவுகளில் செப்புக் காசுகளாகவே உள்ளனவாகக் குறிப்பிடுகிறார்.

**முதல் வகை :**

மூன்று வரிகளில் கோனேரிராயன் என்ற எழுத்துக்கள் ஒருபுறமும் பின்புறம் நிற்கும் காளை, காளை முன் குத்துவாள் ஆகிய உருவங்கள் உள்ள காசுகள்.

**இரண்டாம் வகை :**

ஒரு புறம் வலதுபுறம் நோக்கிய காளை, காளையின் முன் உடைவாள், உடைவாள் மேல் மாலை சுற்றப்பட்டும், காளைக்கு மேலாக ஒரு பிறைவடிவமும் காணப்படுவதாகவும், இதில் காளை உருவம் சிறிய அளவில் இருப்பதாகக் குறிப்பிட்டு பின்புறம் கோ னேரிராயன் என்ற தமிழ் எழுத்துக்கள் மூன்று வரிகளில் உள்ளதாகக் குறிப்பிடுகிறார்.

**மூன்றாம் வகை :**

ஒரு புறம் வலது பக்கம் நோக்கி நிற்கும் காளை, காளையின் மேல் கட்டாரி (பரசு) சின்னம், பின்புறம் கோனேரிராயன் என்ற எழுத்துக்களின் நடுவே உடைவாள் ஆகியவை உள்ளதாகவும், இக்காசில் உடை வாளை விட கட்டாரிக் குத்தான் முக்கியத்துவம் கொடுத்திருப்பதாகவும், இவ்வகைக் காசுகள் மூன்று அளவுகளில் (பெரியவை, நடுத்தரம், சிறியவை) தமக்குக் கிடைத்துள்ளதாகவும் குறிப்பிடுகிறார்.

**நான்காம் வகை :**

ஒருபுறம் நிற்கும் காளை (வலதுபுறம் நோக்கி), காளையின் முன் உடைவாள், காளையின் தலைக்கு மேலாகச் சிறிய குடை, ஒரு பிறை மூவிதழ் கொண்ட ஒருமலர் ஆகியவையும் பின்புறம் கோ னேரிராயன் என்ற மூன்று வரி எழுத்துக்கள் உள்ளதாகவும், இதில் காளை உருவம் பெரிய அளவில் இருப்பதாகவும் குறிப்பிடுகிறார்.

இந்த நான்குவகை காசுகளும் தமக்கு தஞ்சாவூர், பாபநாசம், கும்பகோணம், மயிலாடுதுறை, வேலூர், கடலூர், திருச்சி, திருக் கோயிலூர் போன்ற இடங்களில் கிடைத்தனவாகவும் குறிப் பிடுகிறார்.

தங்கம், வெள்ளி போன்ற உலோகங்களில் உள்ள கோனேரிராயன் காசுகள் இதுவரை கிடைக்கப் பெறவில்லை யாயினும், பல்வேறு அளவுகளில், பல வகைபாடுகளுடன்

கோனேரிராயனின் செப்புக் காசுகள் ஐநூறு ஆண்டுகளுக்குப் பிறகும் மிகுந்த அளவில் தமிழகத்தில் கிடைப்பதால், இவனது ஆட்சித் திறம், பொருளாதார வலிமை ஆகியவை பற்றி நன்கறிய முடிகின்றது. கோனேரிராயன் தன் தாய்மொழியில் எழுத்துக்களைப் பொறித்து இக்காசுகளை வெளியிட்டு, தனது தனித்தன்மை யினையும் (விஜய நகரப் பேரரசுக்கு கட்டுப்படாமல்), வலிமை யையும் உலகுக்குக் காட்டியுள்ளான். எனவே இக்காசுகள் தமிழக வரலாற்றில் தமிழனின் தன்மானம், அவனது தன்னாட்சி வலிமை, திறமை ஆகியவற்றை உலகுக்கு என்றென்றும் எடுத்துக்காட்டும் சான்றுகளாக விளங்குபவை என்பதில் ஐயமில்லை.

# கோனேரிராயன் கல்வெட்டுக்களும் ஆண்டுக் குறிப்புகளும்

| எண் | இடம் | கோள்நிலைக் குறிப்பு | ஆங்கில ஆண்டும் நாளும் |
|---|---|---|---|
| 1. | தஞ்சாவூர் மாவட்டம் திருப்புறம்பியம் சாட்சிநாதர் திருக்கோயில் | விஸ்வாசு, மீனமாதம், புனர்பூசம், திங்கட்கிழமை, | கி.பி 1485 மார்ச் 21 ஆம் நாள். |
| 2. | தென் ஆர்க்காடு மாவட்டம் திட்டக்குடி சுகாசின பெருமாள் திருக்கோயில் | பராபவ கார்த்திகை மாதம் 10 ஆம் நாள் | கி.பி 1486 நவம்பர் 8 ஆம் நாள் |
| 3. | திருச்சிராப்பள்ளி மாவட்டம் திருமழபாடி வைத்தியநாத சுவாமி திருக்கோயில் | சகம் 1409, பிலவங்க, தைமாதம், 24 ஆம் நாள், | கி.பி 1487 ஜனவரி 20 ஆம் நாள் |
| 4. | — மேலது — | பிலவங்க - தனுஸ் திளதிய- திங்கள்-புஷ்ய சகம் 1410 | 1487. |
| 5. | தென்ஆர்காடு மாவட்டம் ஸ்ரீ முஷ்ணம் நித்தியேசுவரர் திருக்கோயில் | கீலக ஆண்டு ஆடி12 ஆம் நாள் சூரிய கிரகணம் | கி.பி 1488 ஜீலை 10 ஆம் நாள் வியாழக்கிழமை. |
| 6. | தஞ்சாவூர் மாவட்டம் சீர்காழி பிரமபுரீஸ்வரர்திருக்கோயில் | சகம் 1410 கீலக ஆண்டு துலா மாதம் மகம் – புதன்கிழமை | கி.பி 1488 அக்டோபர் முதல் நாள். |

| | | | |
|---|---|---|---|
| 7. | திருச்சிராப்பள்ளி மாவட்டம் திருக்கற்குடி (உய்யக்கொண்டான் திருமலை உய்யகொண்டநாதர் திருக்கோயில் | சகம் 1411 சௌமிய ஆண்டு ஆவணி 5 ஆம் நாள் | கிபி 1489 ஆகஸ்ட் 4 ஆம் நாள் செவ்வாய். |
| 8. | திருச்சிராப்பள்ளி மாவட்டம் திருகற்குடி (உய்ய கொண்ட நாதர் திருக் கோயில்.) | சகம் 1411 சௌமிய ஆண்டு ஆடி மாதம் 21 ஆம் நாள். | கி.பி 1489 ஜீலை 19 ஆம் நாள் ஞாயிற்றுக் கிழமை |
| 9. | திருச்சிராப்பள்ளி மாவட்டம் திருமழபாடி வைத்தியநாத சுவாமி திருக்கோயில். | சகம் 1412 சாதாரண ஆண்டு கார்த்திகை 10 ஆம் நாள் | கி.பி 1490 நவம்பர் 8 ஆம் நாள் திங்கட்கிழமை |
| 10. | தஞ்சாவூர் மாவட்டம் கும்பகோணம் நாகேசுவர சுவாமி திருக் கோயில் | சகம் 1412 சாதாரண ஆண்டு விருஷிகத்து மகர ஞாயிறு அமர பட்சம் நவமி. ஆதி வாரம். பெற்ற அஸ்தத்து நாள். | கி.பி 1490 |
| 11. | திருச்சிராப்பள்ளி மாவட்டம் திருமழபாடி வைத்தியநாத சுவாமி திருக்கோயில் | சகம் 1414 பரிதாபி ஆவணி 26 ஆம் நாள் | கி.பி 1492 ஆகஸ்ட் 24 வெள்ளிக்கிழமை |
| 12. | திருச்சிராப்பள்ளி மாவட்டம் திருவரங்கம் அரங்கப் பெருமான் திருக்கோயில் | பரிதாபி ஆண்டு ஆவணி 26 ம் நாள் வெள்ளிக் கிழமை உத்திரத்து நாள் | கி.பி 1492 ஆகஸ்ட் 24 ஆம் நாள். |

| | | | |
|---|---|---|---|
| 13. | திருச்சிராப்பள்ளி மாவட்டம் திருவரங்கம் அரங்கப் பெருமாள் திருக்கோயில் | பரிதாபி ஆண்டு மார்கழித் திங்கள் முதல் நாள். | கி.பி 1492 நவம்பர் 28 ஆம் நாள் புதன் கிழமை |
| 14. | திருச்சிராப்பள்ளி மாவட்டம் திருச்செந்துறை விஸ்வாரண்யேஸ்வரர் திருக்கோயில் | சகம் 1414 பரிதாபி ஆண்டு மார்கழி 18 ஆம் நாள். | கி.பி 1492 டிசம்பர் 15 ஆம் நாள் சனிக்கிழமை. |
| 15. | தஞ்சாவூர் மாவட்டம் பந்தநல்லூர் ஆதிகேசவ பெருமாள் திருக்கோயில் | விரோதிகிருது பங்குனி 9 ஆம் நாள். | கி.பி 1492 மார்ச் 5 ஆம் நாள் திங்கட்கிழமை. |
| 16. | தென் ஆற்காடு மாவட்டம் நல்லூர் நல்ல நாயனார் திருக் கோயில். | சகம் 1415 கும்ப மாதம் புனர்பூச நாள் திங்கட்கிழமை. | கி.பி 1493 ஜனவரி 28 ஆம் நாள் திங்கட்கிழமை. |
| 17. | ஆந்திர மாநிலம் திருமலை - திருப்பதி | சகம் 1415 பிரமாதீச சிம்ம ஞாயிறு பூர்வ பட்ச சப்தமி சோமவாரம் அனுஷநாள். | கி.பி 1493 ஆகஸ்ட் 19 ஆம் நாள் திங்கட்கிழமை |
| 18. | தஞ்சாவூர் மாவட்டம் திருச்செங்காட்டாங்குடி கணபதீசுவரர் திருக்கோயில் | சகம் 1417 ஆனந்த ஆண்டு | கி.பி 1495 |

| | | | |
|---|---|---|---|
| 19. | தஞ்சாவூர் மாவட்டம் புள்ளிருக்கு வேளூர் (வைத்தீசுவரன் கோயில்) | ஆனந்த வருடம் மார்கழி 15 ஆம் நாள் | கி.பி 1495 |
| 20. | தஞ்சாவூர் மாவட்டம் துக்காச்சி ஆபத்சகாயேசுவரர் திருக்கோயில் | — | — |
| 21. | தென் ஆற்காடு மாவட்டம் எலவானாசூர் | | |
| 22. | செய்யார் (திருவோத்தூர்) | — | — |

# கல்வெட்டுக்கள்

## கல்வெட்டு எண் - 1
## திருப்புறம்பியம்
## (தஞ்சாவூர் மாவட்டம்)

ஸ்ரீ சாட்சிநாதர் திருக்கோயில் உட்கோபுரத்தின் வலதுபுறசுவர்

தென் இந்திய கல்வெட்டுக்கள்
ஆண்டறிக்கை 1932
கல்வெட்டு எண் - 160.

Report : -

Saka 14 ** (?) Vishvasu Mina - Su 5 Monday punarpusam - Tamil - obstructed by a pillar in The Middle.

Registers a remission of Taxes on the Temple lands for the Mahapuja of the God at Triuppurambiam as the gift of Koneridewa Maharaja who calls himself " the Lord of Kanchipura ".

இக்கல்வெட்டின் மேல் பிற்காலத்தில் எழுப்பப்பெற்றுள்ள தூண் ஒன்றினால் முழுக் கல்வெட்டும் படிக்க இயலாது. இங்கு குறிப்பிட்டுள்ள விஸ்வாசு ஆண்டு, மீனமாதம், திங்கட்கிழமை, புனர் பூசம் ஆகிய குறிப்புகள் அடிப்படையில் காலக் கணக்கீடு செய்யும் போது கி.பி 1485 மார்ச் உ1 ஆம் நாள் வரையப் பெற்ற கல்வெட்டு என அறிய முடிகிறது. மேலும் இக்கல்வெட்டில் விஜயநகரப் பேரரசனான தேவராயன் (பிரபுடதேவராயன்) பெயர் குறிப் பிடப்பெற்று அவருக்கு உட்பட்ட மன்னனாகவே கோனேரி ராயன் குறிக்கப்பெற்றுள்ளான்.

# கல்வெட்டு எண் - 2
## திட்டக்குடி
## (தென் ஆர்க்காடு மாவட்டம்)

ஸ்ரீ சுகாசின பெருமாள் திருக்கோயில் மேற்குச் சுவரில் உள்ளது.

தென் இந்திய கல்வெட்டுகள்

ஆண்டறிக்கை 1903

கல்வெட்டு எண் - 22. A.

தென் இந்திய கல்வெட்டுக்கள்

தொகுதி எண் - 13 கல்வெட்டு எண் - 293.

## கல்வெட்டு

1. (பராப்வ) வருஷம் கார்த்திகை மீஉ ய உ ஸ்ரீமன் மஹாம
2. ண்டலெஸ்வர பட்டுக் கட்டாரி இராய வசவ சங்கரன்
3. மதி ஆதிமன்னர் மணவாளன் கோனேரிதேவ மக
4. ா இராசாவின் காரியத்துக்கு கடவார் வடகரை விரு
5. தராச பயங்கர வளநாட்டு மேற்கால் நாட்டு இருங்
6. கோளப்பாடி வளநாட்டு கரைப் போக்கு நாடு திட்ட
7. டை குடி பெருமாள் வீற்றிருந்த கோயில் தாநத்தா
8. ற்கு ஆறிய வரக்காட்டின காரியம் இந்த சீர்மை ஆண்டார்
9. மநவாத்திச் சீர்மை ஆகத் திருஉளம பற்றி அருளி புதுமுதலுக்
10. குதிக்கு சன்னதியிலே தோப்பு இடுகு முகுதத்திலே ஆண்ட
11. வர் திருமேனிக்கு நன்றாக வேணும் என்று பெருமாள் வீற்றிருந்த பெ
12. ருமாள் திருவிளையாட்டம் கரைப் போக்குநாடு விளாகம் ஸர்வமா
13. ன்னியம் ஆகப் பண்ணுகையில் இந்த ஊற்கு புறவரி வினியோக
14. மாகக் கொண்டு வருகிற விநியோகமும் நல் எருது நற்பசு
15. நல் ஆடு கோணிகை விரிமுட்டு உலுப்பை ஊழியம் உள்மாகா
16. ணி சீவிதம் அதிகாரி சோடி கரணிக்கர் கொடி ஓலை எழுத்து வந்த

17. னை அரசு பேறு ஆயம் வழிச்சாரி பட்டடை சலத்தரம் மற்றும் எ
18. ப்பெறபட்ட பல வினியோகங்களும் சந்திறாதித்தவரையும்
19. ஸர்வ மான்னியம் ஆக கற்பித்த அளவுக்கு இம் மரியாதியிலே
20. திரு மருங்........ கிலே கல்வெட்டி ஸர்வமானியமா
21. க அனுபொவித்துக் கொள்ளவும் இன்த தர்மத்துக்கு ஹா
22. னி பண்ணினவர்கள் கெங்கை கரையில் காரம் பசுவை
23. கொந்ற பாபத்திலெ பொகக் கடவார்களாகவும் இந்த தர்மம்
24. த்தை பாலனை பண்ணிநவர்கள் கங்கை கரையிலே ஆ ............

(கல்வெட்டின் பிற்பகுதி முற்றிலும் சிதைந்து விட்டது)

**கல்வெட்டு விளக்கம் : -**

கி.பி. 1486 ஆம் ஆண்டு நவம்பர் எட்டாம் நாளுக்குச் சமமான பராபவ வருஷம் கார்த்திகை மாதம் பொறிக்கப் பெற்ற இச்சாசனம் திட்டக்குடி சுகாஸின பெருமாள் கோயிலுக்காக அளிக்கப் பெற்ற கறைபோக்கு நாட்டு விளாகம் எறும் கிராமத்தினை சர்வ மானியமாக அளித்ததைக் கூறுகின்றது.

## கல்வெட்டு எண் - 3
## திருமழபாடி
## (திருச்சி மாவட்டம்)

ஸ்ரீ வைத்திய நாத சுவாமி திருக்கோயில், கருவறையை ஒட்டிய செப்புத் திருமேனிகள் வைக்கும் அறையின் தென்புறச் சுவர்.

**A.R.E 1920**

Saka 1409 plavanga Dhanus badi Tridiya Monday pushya - Tamil

Registers a gift of land To a dancing woman for service in the Temple by Konerideva maharaja.

**கல்வெட்டு விளக்கம் : -**

திருமழபாடி திருக்கோயிலில் ஆடற்பணி புரிய கோனேரிராயன் அளித்த நிலக்கொடை பற்றி விவரிக்கின்றது.

## கல்வெட்டு எண் - 4

## திருமழபாடி

## (திருச்சி மாவட்டம்)

ஸ்ரீ வைத்தியநாத சுவாமி திருக்கோயில் இரண்டாம் இராஜ கோபுர நுழைவாயிலின் இடது புறம்.

### கல்வெட்டு

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சகாத்தம் 1409 மேல் செல்லா
2. நின்ற பிலவங்க வருடம் தை மீ 24 உ *ஸ்ரீ மந்மகா*
3. *மண்டலேஸ்வரந்* பட்டுக்கட்டாரி ராய பசவ சங்கரந்
4. மதியாத மன்னர் மணவாளர் காஞ்சிபுர வரதீசுர
5. கோனேரிதேவ மஹாஇராசர் திருமழபாடி
6. தானத்தார்க்கு நிருபம் நங்குள கோயில் சீர்மை
7. க்கு அட்டவணை புறவரி கல்அணை நாட்டுக்காணி
8. க்கை சூலவரி இடுரகை இளயவற்தனை அவத
9. வற்தனை காணிக்கரவற்தனை அஷ்டமாநுகிக்
10. நஞ்கு வாசி இறையிலி காண ஆட்சி பேறு இறையிலிக் காணிக்
11. கை இபங்களிர் பறையர் வெட்டியார் வரிசாகி வரிஇ
12. னவரி துண்ட வரி குதிரைக் காணிக்கை சமை
13. யபபழ போகராக்கம் நிலவழி அரசுபேறு தலை
14. யாரி தகம் ஒடம் ஒழுக்கு நிறபாட்டம் காவற்
15. காரன் கொல்லன் தைச்சன் குசவர் ஊழியம்
16. மற்றும் வாசலில் பதிவுஆக நடந்து வருகிறது
17. கை உண்டானது கழித்து சந்திறாத்திய வ
18. ரையும் சர்வமானியம் ஆக நடக்கும் படி
19. கற்பித்த அளவுக்கு இந்த வகையில் ஆகிற முத
20. ல் கொண்டு நாயனார் திருமழபாடி உடையார்
21. நாயனார்க்கு யிவற் பூசை திருப்பணி திங்கள்
22. திவகம் திருநாளும் நடத்திக் கொண்டு ஒன்
23. றுக்கும் ................ மல் இருக்கவும் இந்த தன்
24. மத்துக்கு அகிதம் பண்ணினவன் கெங்கைக்
25. கரையிலே கபிளை காரம் பசுவைக் கொன்ற
26. பாவத்திலே போகக் கடவன் ஆகவும்.

கல்வெட்டு விளக்கம்

கி.பி 1487 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 20 ஆம் நாள் கோனேரிதேவமகாராசன் திருமழபாடி திருக்கோயில் பூஜை களுக்காகவும், திருப்பணிகளுக்காகவும் தன் அரண்மனை வரு வாயில் சில குறிப்பிட்ட வகைகளில் திருமழபாடி தானத்தார்க்கு சர்வமான்யமாய் அளித்ததை விவரிக்கின்றது. இதில் அரசு வருவாயாகப் பெறப் பெற்ற வரிகள் பற்றிய நீண்ட பட்டியல் இடம் பெற்றுள்ளது.

# கல்வெட்டு எண் - 5
# திருமுட்டம் (ஸ்ரீமுஷ்ணம்)
# (தென் ஆர்காடு மாவட்டம்)

ஸ்ரீ நித்யேஸ்வரர் திருக்கோயில் கருவறை வடபுறச் சுவர் - முதல் திருச்சுற்றின் கிழக்குச் சுவர்.

தென் இந்திய கல்வெட்டுக்கள்
ஆண்டறிக்கை - 1916
கல்வெட்டு எண் - 249.

Kilaka Adi Solar eclipse - Tamil

Records that Nagaiya Nayakar a servant of the king koneriraya made a Sarva manya gift of the Village of kilaineduvayil situated in vilandai parruone of eleven districts granted. To him for military service To The Temple of Tirunarayanisura mudaiya Nayanar. for the merit of the king.

இக்கல்வெட்டில் குறிக்கப்பட்டிருக்கும் கோள்நிலைக் குறிப்புகள் அடிப்படையில் கணக்கீடு செய்தால் சகம் 1410 கி.பி 1488 ஜீலை 10 ஆம் நாள் வியாழக்கிழமை வருகின்றது.

# கல்வெட்டு எண் - 6
## சீர்காழி
## (தஞ்சாவூர் மாவட்டம்)

ஸ்ரீபிரம்மபுரீஸ்வரர் திருக்கோயில் இரண்டாம் கோபுரம் (கிழக்கு) நுழைவாயிலின் வலது புறம்.

தென் இந்திய கல்வெட்டுக்கள்
ஆண்டறிக்கை 1918.
கல்வெட்டு எண் - 396.

Saka 1410 - Kilaka - Thula - Wednesday
Maka - Tamil.

Records that Konerideva Maharaja made the villages belonging To the Temple at sigali, as servamanyagrants in order that worship and offerings to be conducted.

இக்கல்வெட்டில் குறிக்கப்பெற்றுள்ள காலக்குறிப்புகளுக்கு சரியான ஆங்கில ஆண்டு கி.பி 1488 அக்டோபர் முதல் நாளாகும்.

## கல்வெட்டு எண் - 7

## திருகற்குடி

## (உய்யகொண்டான் திருமலை)

## (திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

ஸ்ரீ உஜ்ஜீவ நாதசுவாமி திருக்கோயில் - அம்மன் கோயில் கருவறைசுவர்.

தென் இந்திய கல்வெட்டுக்கள்
ஆண்டறிக்கை 1939 - 40
கல்வெட்டு எண் -378.

Saumya - Avani 5. Tamil in the characters of 15 th Centuary A.D. purports To record an order of God Adi chandesvara on behalf of God Vilumiya nayanar To a Kaikola named *Vaidyanatha Kalingarayan alias peruvelppaiyan son of Tirumenialagaiyan of Tirumalapadi making a* sarva manya grant of land and house site To him out of Temple property Through konerideva maharaja.

இக்கல்வெட்டில் குறிக்கப்படும் காலக்குறிப்புகளுக்கு சரியான ஆங்கில ஆண்டு 1489 ஆகஸ்ட் நான்காம் நாள் செவ்வாய்க் கிழமையாகும். இக்கல்வட்டு இறைவனுக்காக சண்டீசர் பேசுவது போன்று எழுதப் பெற்றதாகும். திருமழபாடியைச் சேர்ந்த திருமேனி அழகய்யன் மகன் பெருவேலப்பய்யன் என்ற கைக்கோளனுக்குச் சர்வமானிய நிலமும், வீட்டு மனையும், கோனேரிராயன் அளித்தான் என்பதை இக்கல்வெட்டுக் கூறுகின்றது. கல்வெட்டை நேரில் படித்தபோது ஆண்டறிக்கையில் பிழையிருப்பது அறிய முடிந்தது.

## கல்வெட்டு எண் - 8
## திருகற்குடி
## (உய்யகொண்டான் திருமலை)
## (திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

ஸ்ரீ உஜ்ஜீவ நாதசுவாமி திருக்கோயில் கருவறை சுவர்.

## கல்வெட்டு

சுபமஸ்து சுபஸ்ரீ விஜயா சுப ........ சவுமிய வரு ஆடி மீ உ1 ஸ்ரீமன் *மகாமண்டலேசுவரன் பட்டுக்கட்டாரி இராய வசவசங்கர மதியாத மன்னர் மணவாளன் காஞ்சிபுரவரதீசுவர ஸ்ரீ ராச கோனேரி தேவமகாராசர்* தென்கறை ராச கம்பீர வளனாட்டில் உய்ய கொண்டான் திருமலைனாயனாற் விளுமிய னாயற் கோயில் தானிகருக்கு தற்மமாக சாசனப் பட்டயம் குடுத்தபடி தங்கள் கோவிலுக்கு வாசிலில் (பதிந்து நடனயிறை இலாபம்........) பதிந்து நடந்துவரும் சோடியிறை யிலாபம் கொளுந்துக் காணிக்கை குதிரைக் காணிக்கை மகோஸ்தவவற்த்தனை அவசறவற்த்தனை காணிக்கை வந்தனையிதுகள் எல்லாம் அரைமனை தங்கள் விவரம் பண்ணி தானத்தாருக்கு....... சற்வதானமாக கட்டளை குடுத்தோம் ............. பரிசாறகம் சுவாமி கைங்கரியம் னடப்பிக்கவும் யிதுகள் எல்லாம் தற்மமாக விட்டோம்.

**கல்வெட்டு விளக்கம் : -**

கி.பி 1489 ஆம் ஆண்டு ஜீலைத்திங்கள் 19 ஆம் நாள் ஞாயிற்றுக் கிழமை கோனேரிதேவ மகாராஜர் தனது அரண்மனைக்கு அளிக்கும் வரிகளில் விலக்கு அளித்து உய்யகொண்டான் திருமலை திருக்கோயில் தானிகருக்கு அளித்த தர்மசாசனம் பற்றி விவரிக்கின்றது.

## கல்வெட்டு எண் - 9
## திருமழபாடி
## (திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

ஸ்ரீ வைத்தியநாத சுவாமி திருக்கோயில் மண்டபத்தின் கிழக்குப்புற ஜகதிப்படை.

## கல்வெட்டு

1. சுபமஸ்த்து ஸ் வஸ்தி ஸ்ரீ ஸகாத்தம் 1412 இதன் மேல் செல்லா நின்ற சாதாரண வருஷம் கார்த்திகை மீ 10 உ
2. ஸ்ரீமன் மகாமண்டலேஸ்வரன் பட்டுக்கட்டாரி இராய பசவசங்கர மதியாத மன்னர் மணவாள
3. காஞ்சிபுர வரதீஸ்வரந் கோனேரிதேவ மகா இராசர் கண்ட கோனேரி இராயன் திருமண்டபம்.

கல்வெட்டு விளக்கம் : -

கி.பி 1490 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 8 ஆம் நாள் *மகாமண்டலேசுவரன்,* பட்டுக்கட்டாரி இராய பசவசங்கரன், மதியாத மன்னர் மணவாளன், காஞ்சிபுரவரதீசுவரன் என்ற பட்டங்கள் புனைந்த கோனேரிதேவமகாராயன் தன்பெயரால் " கோனேரி இராயன் திருமண்டபம் " என்ற இம்மண்டபத்தை எடுத்தான் என்று கூறப்பெற்றுள்ளது.

# கல்வெட்டு எண் - 10
## கும்பகோணம்
## (தஞ்சாவூர் மாவட்டம்)

ஸ்ரீ நாகேசுவர சுவாமி திருக்கோயில் கருவறை முன் மண்டபத்தின் வடபுறச் சுவர்.

## கல்வெட்டு

ஸ்வஸ்தி ஸ்ரீ சாலிவாகன சகாப்தகா வரு 1412 இன்மேல் செல்லா நின்ற சாதாரண உரு ஸ்ருஷ்ஷிகத்து மகரனாயறு அமர பக்ஷத்து நவமியும் ஆதிவாறமும் பெத்த அஸ்த்தத்துனாள் உய்யகொண்டாற் சோழ வளநாட்டு பாம்பூற்னாட்டு வாமதெலி திருக்குட மூக்குனாயனாற் மடந்தை பாகனாயனாற் கோவிலுக்கு கண்டனாத் தேவற் திருவாய் மலர்ந்தருளிய படிக்கும் மடந்தை முதலிகளும் மகா தேவரக்ஷகரும் மூலபுறுஷத்தாரும் கோவில்னாயகம் செய்வாரும் தேவகன்மிகளும் அனைத்து கொத்தும் நிறைவற நிறைவற நிறைத்து குறைவற கூடியிருந்து இந்த கோயில்க் காணிதேவர் அடைந்த பலனை கொங்கராயனுக்கு கொடுத்த திருமுகம் னாயனாற் மடந்தை பாகனாயனாறுக்கு அங்கரங்க வைபோக நெய் வெத்தியத்துக்கு ஸ்ரீமன் மகா மண்டலேசுவற கிய பட்டுக் கட்டளை றாய வசவசங்கர மதியாத மன்னாற் மணவாள காஞ்சிபுற வரதீசுவரன் கோனேரிதேவ மகாறாசாவினுடைய உபயமாக நடக்கும்படிக்கு கோயிலாரும் ஆதாறங்கள் கற்பூற செற்பித்துக் கொண்டு கல்லிலும் வெட்டி னாட்டி வியத்து தந்தபடியாலும் தங்கள் முகோந்திரமாகத் திருவாசலுக்கு வேண்டின கோயில் காரியங்கள் செய்வித்த படியினாலும் தனக்கு மடந்தைபாக கொங்கறாயன் கண்டு திருநாமத்தாலே பேரும் திருவுளம் பத்தினவரும் சிவெம் தட்ட வளமி நிமகஞ் செறியிலும் பசுக சேத்த உழவனால் நஞ்சைய் ற ஒநிநு வேலினாள் ஒன்றும் சோறும் சந்நதித் தெருவில் வட சரகில் ஒண்பதாழன் பாலத்துனாச்சி மனைக்கி மேற்கு சேந்த மனை ஒன்றுக்கு கீழ்மேல் கோல் ரு தென்வடல் கோல் ஒன்றும் ஆக அரைநிலமும் உட்பட மனைக்காக இந்த உழவனால் நஞ்சை நிலமும் முவ்வேலியும் சோறு நாழியாம் ம உ னெ அம்பத்தரு சந்தாரித்த வரையும் ஷ சயவயமாநிமாக அனுபவித்துக் கொள்ளவும்.

**கல்வெட்டுச் சுருக்கம் : -**

கி.பி 1409 ஆம் ஆண்டு, உய்யக் கொண்டார் சோழவளநாட்டு பாம்புர நாட்டு திருக்குடமூக்கு (கும்பகோணம்) மடந்தைபாக

நாயனார் கோயிலில் மடந்தை முதலிகள், மாதேவரக்ஷகர், மூலபுருஷத்தார் கோயில் நாயகம் செய்வார் போன்ற பலரும் கூடி கண்டனாத் தேவர் திருவாய் மொழிந்தபடி கோனேரி தேவ மகாராயருடைய உபயமாக திருக்கோயில் பூசைகளுக்கு அளித்த நிலக்கொடை பற்றி இக்கல்வெட்டு விவரிக்கின்றது.

## கல்வெட்டு எண் - 11
## திருமழபாடி
### (திருச்சிராப்பள்ளி மாவட்டம்)

ஸ்ரீ வைத்திய நாத சுவ்ாமி திருக்கோயில் மண்டபத்தின் மேற்கு அதிஷ்டானப் படை.

### கல்வெட்டு

1. சுபமஸ்த்து ஸகாத்தம் 1414 இதன்மேல் செல்லாநின்ற பரிதாபி வருஷம் ஆவணி மீ 26 உ திருமழபாடி கொத்து
2. முதல் பெரு ........... னாடலான வயித்திய நாதக் காலிங்கராயன் ஆன கோனேரி *இராசன் சோழ கோனுக்கு*
3. குடுத்த திருமுகம் வைத்தியனார் திருமழபாடி உடைய நயினார் திருக்கோயிலுக்கு முன் மகா
4. பூசை கொண் ........... ஒருபடினாயன் மார் நீங்கலாக கோனேரிதேவ மகாராசாவின் பண்டாரத்துக்கு
5. காணிக்கை குடுத்து ஒருபடினாயன் மானார் எழுந்தருளப் பண்ணுவித்து மகாபூசை நடத்துகையில்
6. தனக்கு ஆதி சண்டேஸ்வரதேவர் திருவாய் மலர்ந்தருளி தேவதானம் பேர்அரசூரில் பிள்ளையார் கோயிலுக்கு
7. தெற்கு கட்டளையில் வழிக்கு மேற்கு சூலக் கல்லடி வடபத்தில் இறையிலி யானிசி நத்தம் உனால் ரு கலி இந்
8. நிலம் வேலியும் சந்திராதித்த வரையும் சருவ மாந்நிய இறையிலி கொண்டு அனுபவித்து கொள்ளவும் இதுக்
9. கோயில் கணக்கு அயித்தாவில்லி உடையான் வயித்திய நாதப்பிரியன் எழுத்து
10. -------------------------------
11. -------------------------------
12. -------------------------------
13. -------------------------------
14. இவை பேரம்பல பிச்சன் எழுத்து

15. இவை ஆரிய ----------- எழுத்து

16. சடையன் திருமழபாடி ஆசாரி 11 உ

**கல்வெட்டுச் சுருக்கம் : -**

கி.பி 1492 ஆம் ஆண்டு ஆகஸ்ட் 24 ஆம் நாள் வயித்தியநாதக் காலிங்கராயன் எனும் கோனேரிராயன் சோழகோன் என்ற அதிகாரிக்கு அனுப்பிய ஆணைப்படி திருமழபாடி வைத்தியநாதர் திருக்கோயிலில் எழுந்தருளப்பட்ட நாயன்மார்களின் மகா பூசைக்கு பேரரசூர் எனும் ஊரில் கொடுக்கப்பட்ட நிலங்கள் பற்றி விவரிக்கின்றது. இச்சாசனத்தில் கோயில் கணக்கன் அயித்தாவல்லி உடையான் வயித்தியநாதப் பிரியன், பேரம்பல பிச்சன், போன்றவர்கள் கையொப்பம் இட சடையன் திருமழபாடி ஆசாரி என்பான் கல்வெட்டாக பொறித்த செய்தி கூறப் பெற்றுள்ளது.

## கல்வெட்டு எண் - 12

## திருவரங்கம் (ஸ்ரீரங்கம்)

## (திருச்சி மாவட்டம்)

திருவரங்கம் திருவரங்கன் கோயில் நான்காம் திருச்சுற்று சொர்க்கவாசல் கோபுரநிலையின் இடதுபுறம் உள்ளது.

## கல்வெட்டு

1. பரிதாபி வரு ஆவணி மீ
2. 26 உ வெள்ளிக் கிழமை
3. திரிதியையும் உத்திரமும்
4. பெற்ற நாள் மத்தியான
5. த்திலே விருச்சிகம் லக்
6. கினமாக இந்த திருக்கதவு
7. நாட்டித்து கோனேரிதேவ
8. மகா ராசாவின்
9. கயிங்கரியம்

**கல்வெட்டுச் சுருக்கம் : -**

பரிதாபி ஆண்டு ஆவணித் திங்கள் இருபத்தாறாம் நாள் வெள்ளிக் கிழமை திரிதியையும் உத்திர விண்மீனும் கூடிய நன்னாளில், மதிய நேரததில் திருவரங்கம் சொர்க்கவாசல் எனும் கோபுர வாயிலுக்கு கோனேரிதேவ மகாராசா திருக்கதவுகளை தனது தர்மமாக அமைத்துக் கொடுத்தார் என்ற செய்தி கூறப் பெற்றுள்ளது. இங்கு குறிப்பிடப்படும் கோள்நிலைகளை கணக்கீடு செய்தால், இந்நிகழ்ச்சி கி.பி 1492 நவம்பர் 28 ஆம் நாள் புதன்கிழமை மதியம் நடந்ததாகும்.

# கல்வெட்டு எண் - 13
## திருவரங்கம் (ஸ்ரீரங்கம்)
## திருச்சிராப்பள்ளி மாவட்டம்

திருவரங்கம் திருவரங்கன் கோயில் நான்காம் திருச்சுற்று சொர்க்கவாசல் கோபுர நிலையில் உள்ளது.

கல்வெட்டு

1. பரிதா வரு மார்கழி மீ க
2. உ கோனேரி தேவ மஹா
3. இராசாவின் அவஸரம்
4. ஆக நாளது முதல் உதைய
5. காலத்திலே ஒரு தளிகை
6. முசரோதரம் ஆக பெருமாள்
7. அமுது செய்து அருளும்
8. படிக்கு அவஸர கட்டளைக்கு
9. செய்த பிச்சாண்டார்
10. கோயில் விடுவேலி நிலம் ங
11. வேலி இந்த மூவேலி நிலத்தில்
12. உபையமும் கொண்டு சந்
13. திராதித்திய வரையும் அவஸர
14. கட்டளை நடக்கக் கடவது
15. ஆகவும்

கல்வெட்டுச் சுருக்கம்

இது கோனேரிராயனின் அரசு ஆணையாகும். கி.பி 1492 நவம்பர் 28 ஆம் நாளன்று, திருவரங்கப் பெருமானுக்கு நாள் தோறும் பொழுது புலரும் உதயகாலத்தில் ஒரு தளிகை தயிர் அன்னம் அமுது செய்விக்க பிச்சாண்டார் கோயில் எனும் ஊரில் மூன்று வேலி நிலத்தை முதலீடாக கோனேரிராயன் அறித்த செய்தி குறிக்கப்பெற்றுள்ளது. இவ்வறக்கட்டளை சந்திரன் சூரியன் உள்ளளவும் தொடர்ந்து நிகழவேண்டும் என்ற குறிப்பும் உள்ளது.

## கல்வெட்டு எண் - 14
## திருச்செந்துறை
## (திருச்சி மாவட்டம்)

ஸ்ரீவில்வாரண்யேஸ்வரர் திருக்கோயில்

தென் இந்திய கல்வெட்டுகள்
ஆண்டறிக்கை 1937 - 38
கல்வெட்டு எண் -145.

Saka 1414 - Registers an in complete Transaction relating to the examption of Taxes on the land belonging To the Temple of Tiruchchendurai - udaiya Nayanar at Isanamangalam.

இக்கல்வெட்டில் சகம் 1414 பரிதாபி ஆண்டு மார்கழி 18 ஆம் நாள் கோனேரிதேவ மகாராயர் ஈசானமங்கலத்து திருச்செந்துறை உடைய நாயனார்க்கு அளித்த சில வரிவிலக்குகள் பற்றி குறிப்பிடுகின்றது. இங்கு கூறப்பெற்றுள்ள காலக்குறிப்புகள் கி.பி 1492 டிசம்பர் திங்கள் 15 ஆம் நாள் சனிக்கிழமையைக் கூறுவதாகும்.

## கல்வெட்டு எண் - 15
## பந்த நல்லூர்
## (தஞ்சாவூர் மாவட்டம்)

ஆதிகேசவ பெருமாள் திருக்கோயில் கருவறை மேற்குசுவர்

தென் இந்திய கல்வெட்டுக்கள்
ஆண்டறிக்கை - 1932
கல்வெட்டு எண் - 119.

Virodhikrit - parguni - 9 - Tamil.

Registers the order of the chief Konerideva Maharaja ' Lord of Kanchi ' assigning certain taxes in favour of The Temples of pasu pathisvara Mahadeva and Adikesava Perumal.

கி.பி 1493 ஆம் ஆண்டு மார்ச் 5 ஆம் நாள திங்கட்கிழமை காஞ்சிபுர வரதீசுவரனாகிய கோனேரிதேவ மகாராஜா பந்தநல்லூர் பசுபதீஸ்வரர்க்கும், ஆதிகேசவ பெருமாளுக்கும் அளித்த சில வரிவிலக்குகள் பற்றி குறிப்பிடுகின்றது.

## கல்வெட்டு எண் - 16

## நல்லூர்

## (தென் ஆர்க்காடு மாவட்டம்)

ஸ்ரீ வில்வாரண்யேஸ்வரர் திருக்கோயில் மண்டபத்தின் தென்புறச் சுவர்.

தென் இந்திய கல்வெட்டுக்கள்
ஆண்டறிக்கை 1940 - 41
கல்வெட்டு எண் - 158

Saka 1415 - Kumba Monday punarpusam.

Records The grants of Tirupperu a hamlet of Toliyur on the north bank (of the river) with all its taxes as sarvamanya on the days of Maka in the Temple of Nalla Nayanar for the welfare of Raja Konerideva Maharaja who is given the birudas pattukkattari, Vasava sankaran, Madiyada Mannar Manavalan and Kanchipura Varadisvara.

கி.பி 1493 ஆம் ஆண்டு ஜனவரி 28 ஆம் நாள் திங்கட்கிழமை கோனேரிதேவமகாராயர் நலம் பெற நல்லூர் நல்லநாயனார் எனும் இறைவர்க்கு மக நாட்களில் பூஜை செய்வதற்காக அளிக்கப்பட்ட சர்வமான்ய கொடை பற்றி விவரிக்கின்றது. இக்கல்வெட்டில் உள்ள குறிப்பால் மக விண்மீன் கோனேரிராயனின் பிறந்த நாள் விண்மீனாகக் கொள்ள வாய்ப்புள்ளது.

## கல்வெட்டு எண் - 17

## திருமலை - திருப்பதி

## (ஆந்திர மாநிலம்)

திருமலை வேங்கடவன் திருக்கோயில் இரண்டாம் திருச்சுற்றின் வடபுறச்சுவர்.

## கல்வெட்டு

1. சுபமஸ்த்து ஸ்வஸ்தி ஸ்ரீ சகாப்தம் ஆயிரத்து நானூற்று ஒருபத்து அஞ்சின் மேல் செல்லா நின்ற பிறமாதீச சம்வத் சரத்து சிம்மநாயற்று பூர்வபட்சத்து சப்தமியும் சோம வாரமும்.
2. பெற்ற அநிழத்து நாள் திருமலையில் ஸ்தானத்தாரோம் பேரருளாளந் திருனந்துவனத்துக்குக் கடவ கோயில் கேழ்வி எம்பெருமானார் ஜியற்கு சிலாசாசனம் பண்ணிக் கொடுத்தபடி திருவேங்கட முடையானுக்கு
3. தாம் *கோனேரி ராஜாவின் கையியிலே* விடுவித்துக் *கொண்டு வந்த சோழமண்டலத்து* காவேரி யாற்றுக்கு தென்கறை திருவாரூர் உசாவடி உய்யகொண்ட சோழவளநாட்டில் மேற்கூறு திருமிகைச்சூர் பற்றில்
4. *மருத்துவக்குடி* கிராமம் ஒன்றும் சோழ மண்டலத்தில் சாலியக் கோட்டத்தில் வாழைக்குலைச்சேரி கிராமம் ஒன்றும் ஆக கிராமம் இரண்டுக்கு திரு *வேங்கட முடையான் கோனேரிராஜாவின் பேராலே நாள்வழி* அமுது செய்தருளும்.
5. திருப்போனகம் ஒன்றுக்கு மலைகுனிய நின்றான் மரக்காலால் அமுதுபடி ஒரு மரக்காலும் நெய் அமுது ஆழாக்கும். பயிற்றமுது ஆழாக்கும், உப்பமுது மிளகமுது கறியமுது தயிரமுது இதுவும் அடைக்காயமுது அறுநூறும் இலையமுது ஆயிரத்து
6. இருநூறும் ஆக இந்த வகைப்படி நாள்வழி ஸ்ரீபண்டா-ரத்திலே விட்டுப் போதக் கடவதாகவும் அமுது செய்-தருளின பிரசாதம் நாழியும் பேரருளாளன் திருநந்துவனம் வற்திக்கிறவர்

7. பெற்றுவரக் கடவராகவும் நின்ற பிரசாதம் உள்ளது பூ த்தில் அடைப்பிலே செலவழித்துக் கொள்ளக் கடவோம் ஆகவும் திருத்தாம்பூல பாக்கு அறுநூறும் இலை பிரசாதம் ஆயிரத்து இருநூறும் விட்டவன் விழுக்காடு

8. நாலிலொன்றும் தானத்தார் பன்னிரண்டு நிர்வாகத்திலும் நின்றது வகையிலும் பெற்றுவரக் கடவோமாகவும் இப்படிக்கு சந்திராதித்த வரை தம்முடைய சிஷ்ய பரம்பரை நடக்கக்

9. கடவதாகவும் இப்படிக்கு *ஸ்ரீவைஷ்ணவர்கள்* பணியால் கோயில் கணக்கு திருநின்ற ஊருடையான் எழுத்து இவை ஸ்ரீவைஷ்ணவரக்ஷை

கல்வெட்டுச் சுருக்கம் : -

கி.பி 1493 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 19 ஆம் நாள் திங்கட் கிழமை அன்று இச்சாசனம் எழுதப்பெற்றது. சோழநாட்டு மன்னன் கோனேரிராஜன் பெயரால் நாள்தோறும் திருமலை வேங்கடவனுக்கு அமுது செய்விப்பதற்காக திருமலை திருக்கோயில் தானத்தார்கள் (நிர்வாகிகள்) கோனேரிராஜாவிடமிருந்து சோழ மண்டலத்து திருவாரூர் உசாவடி உய்யகொண்ட சோழவளநாட்டு திருமிகைச்சூர் (தற்போது திருமியச்சூர் என அழைக்கப்படும் ஊர்) பற்றில் உள்ள மருத்துவக்குடி எனும் கிராமத்தையும் சாலியத் கோட்டத்தில் வாழைக்குலைச்சேரி எனும் கிராமத்தையும் அறக் கொடையாய் பெற்றனர். இவ்வாறு பெற்ற கிராமங்களின் வருவாயை பேரருளாளன் திருநந்தவனம் பராமரிக்கும் எம்பெருமான் ஜீயர் என்பவர் மேற்பார்வையில் விட்டு சிலாசாசனம் செய்யப் பெற்றது.

இதன்படி நாள்தோறும் மலைகுனிய நின்றான் எனும் மரக்காலால் ஒரு மரக்கால் அமுதும், நெய்யமுது, பயிற்றமுது, உப்பமுது, மிளகமுது, கறியமுது, தயிரமுது ஆகியவைகளும், பாக்கு 600 - ம் வெற்றிலை 1200 ம் கொண்டு கோனேரிராயனின் பெயரால் அமுது செய்ய வேண்டும் என்று குறிக்கப் பெற்றுள்ளது.

கோனேரிராயன் தன்பெயரால் திருமலை திருவேங்கடவனுக்கு நாள்தோறும் அமுது செய்வித்த அரிய செய்தியே இக்கல் வெட்டாகும்.

## கல்வெட்டு எண் - 18
## திருசெங்காட்டங்குடி
## (தஞ்சாவூர் மாவட்டம்)

ஸ்ரீ உத்திராபதீஸ்வரர் திருக்கோயில் இரண்டாம் கோபுர வாயிலின் வலதுபுறம்

தென் இந்திய கல்வெட்டுக்கள்
ஆண்டறிக்கை 1913.
கல்வெட்டு எண் - 74

A Record in Ananda of Pattuk Kattari Konerideva maharaja. Records gift of taxes to the Temle of uttarapathi Nayaka at the request of Maluva Chakravarthin for maintaining certain festivals.

சகம் 1417 ஆனந்த ஆண்டான கி.பி 1495ல் கோனேரிதேவமகாராயன் செங்காட்டங்குடி உத்தராபதி நாயகர்க்கு அளித்த வரிவிலக்குகள் பற்றியே இக்கல்வெட்டு விவரிக்கின்றது. இதில் குறிப்பிடப்பெறும் மாளுவ சக்கரவர்த்தி யார் என்பது அறிய இயலவில்லை.

## கல்வெட்டு எண் - 19

## புள்ளிருக்கு வேளூர் (வைத்தீஸ்வரன் கோயில்)

## (தஞ்சாவூர் மாவட்டம்)

ஸ்ரீ வைத்திய நாத சுவாமி திருக்கோயில் மேலக் கோபுரவாயிலுக்கு வடக்கில் கீழ்புறச்சுவரில் உள்ளது (தங்க கொடி மரத்துக்கு மேல்பால் உள்ள மேலக்கோபுர கல்வெட்டு)

இக்கல்வெட்டு 10 துண்டுக் கற்களில் தொடர்ச்சியாக ஐந்து வரிகளில் உள்ளது.

1. *ஸ்ரீமன் மண்டலேஸ்வரன்* கோனேரிமகாராஜா புள்ளிருக்கும் வேளூர் தீராவினைதீத்தருளிய தம்பிரானார் கோயிற் பற்றுக்கு ஸ .......... திருவுள்ளம் பற்ற அருளிய நிருபப் படிக்கு கல்வெட்டின் ஆனந்த வருஷம்.
2. மார்கழி மாதம் பதின் அஞ்சாவது நாள் ஸ்ரீ ........... *மகாமண்ட லீஸ்வரன்* பட்டுக்கட்டாரி ராய *வசவ சங்கர* மதியாத மன்னர் மணவாளன் க...... கோனேரி தேவ மகா ராஜா புள்ளிருக்கும் வேளூர் தானத்தாற்கு நிருபம்.
3. தங்கள் .......... யிலுக்கும் கோயில் ......... ஆக நடந்துவந்த திருக்கோயில் ஆறை ஆறில் பின்பு புதுவரிகள் ஆக வந்த பத்துக்கு இரண்டு காணிக்கை வெட்டவரி புதுவரி எட்டு. இராயத வந்ததனை கல்லணை
4. பள்ளா .............. ன யாவரி இ ............... பல வரிகளும் அள் அமைஞ்சி ஊழியமும் இனிமேல் பிறக்கும் பழவரி புது வரிகளும் கழந்து ஸகல சாமுதாயங்களும் சந்திராதித்த வரை நடக்கும் படி கறமத்த அளவுக்கு
5. இம்மரி ................. இம்மரியாதியிலே ஸர்வமான்யம் அனுபவித்து கொள்ளவும் இவை கோனேரிராயன்.

**கல்வெட்டுச் சுருக்கம்**

கி.பி 1495 ஆம் ஆண்டு கோனேரிராயன் புள்ளிருக்கு வேளூர் தீராவினை தீர்த்தருளிய தம்பிரானார்க்கு கோயிற்பற்று அளித்து சில வரிவிலக்குகளும் செய்தமையை விவரிக்கின்றது.

# கல்வெட்டு எண் - 20
## துக்காச்சி
## (தஞ்சாவூர் மாவட்டம்)

ஸ்ரீ ஆபத்சகாயேஸ்வரர் திருக்கோயில் - கிழக்கு உள் இராஜ கோபுரம் - இடதுபுறம்.

தென் இந்திய கல்வெட்டுகள்
ஆண்டறிக்கை - 1918.
கல்வெட்டு எண் - 4

Records the gift of the image of pallakku sokkar To The Temple of Vikrama Cholesvara Tambiranar at Tikkaiatchi by an agent of The minister of Kotaniraya Maharaja.

இக்கல்வெட்டில் இவ்வூர் துக்கையாட்சி என்ற பழம்பெயரில் குறிக்கப்பட்டிருப்பதும், திருக்கோயில் விக்கிரம சோழீஸ்வரம் என்ற சோழர் காலப்பெயரிலேயே அழைக்கப் பட்டிருப்பதும் குறிப் பிடத்தக்கவையாகும். கோனேரிராய மகாராயனின் பிரதிநிதி ஒருவன் பல்லக்குச் சொக்கர் திருமேனி செய்தளித்ததையே இக்கல்வெட்டு விவரிக்கின்றது. கல்வெட்டுத் தொகுதி ஆண்டறிக்கையில் மேலே ஆங்கிலத்தில் குறிப்பிட்டுள்ளது போன்று கோனேரிராயன் பெயர் தவறாக அச்சாகியுள்ளது.

## கல்வெட்டு எண் - 21
## எலவானாசூர்
## (தென் ஆர்காடு மாவட்டம்)

**ARE 503 of 1937 - 38.**

கிராம அர்தநாரீஸ்வரர் திருக்கோயில் வெளித் திருச்சுற்று மேற்கு சுவர்.

**(Tamil Verse)**

In Character of The 15 the Centarary A.D. Records the gift of The Village Surriyan Kurichchi to the god by the resident of Kachchi in the time of Konerideva maharaja.

## கல்வெட்டு எண் - 22
## திருவோத்தூர்
## (வட ஆர்காடு மாவட்டம்)

ஸ்ரீ வேதபுரீஸ்வரர் திருக்கோயிலின் வெளிமதிலின் (கோனேரிராயன் திருமதில்) மேற்குப்புற உட்ச்சுவரில் நீண்ட சிற்பத்தொகுதியில் நடுவண் உள்ள பல்லக்குச் சிற்பத்தின் கீழாக இரண்டுவரிகளாக தெலுங்கு மற்றும் தமிழில் இக்கல்வெட்டு உள்ளது.

### கல்வெட்டு (தெலுங்கு)

கோ நேரி ராயந்

### கல்வெட்டு (தமிழ்)

கோநேரி ராயந்

**கல்வெட்டு விளக்கம் : -**

முன்னால் ஆறு வீரர்கள் செல்ல பின்னே கொடி, சுமந்த வீரன், எக்காளம் ஊதும் வீரன் பட்டத்து யானை, பல்லக்கில் மன்னன், குதிரை வீரன், ஒட்டகத்தின் முதுகில் முரசறைபவன், பின்னே மூன்று குதிரை வீரர்களுடன் உலாசெல்லும் இம்மன்னவரின் பெயர் கோனேரிராயன் என்பதனை இக்கல்வெட்டு கூறுகின்றது.

# திருவரங்கம் கல்வெட்டுகள்

கோனேரிராயனின் ஆணைகளாக திருவரங்கத்தில் உள்ள இரண்டு கல்வெட்டுக்களை முன்பே கண்டோம். இவைதவிர இம்மன்னனது வரலாற்றோடு தொடர்புடைய மூன்று கல்வெட்டுக்கள் இதே திருக்கோயிலில் உள்ளன.

## கல்வெட்டு எண் - 1

முன்பு மொட்டைக் கோபுரம் என்று அழைக்கப்பெற்று, தற்போது நெடிதுயர்ந்த இராச கோபுரம் எழுப்பப் பெற்றுள்ள தெற்கு கோபுர வாயிலின் கிழக்கு நிலைக்காலில் உள்ள அடியவர் ஒருவர் உருவச் சிலைக்கு மேலாக உள்ளது இக்கல்வெட்டு. இதன் எழுத்தமைதி 15 ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியாகும்.

## கல்வெட்டு

சுபமஸ்த்து சௌமிய வருஷம் தைமாதம் 21 உ வெள்ளிக் கிழமை நாள் ஸ்ரீ ரங்கநாத சுவாமிக்கு படித்தனம் ஒன்றும் நடத் தாமல் மிகவும் அந்நியாயம் பண்ணுகையில் குடுக்க மாட்டாதே இந்த திருக்கோவிரத்தில் ஏறி விழுந்து இறந்த காலமெடுத்த அழகிய மணவாளதாசன் ஸ்ரீ கார்யம் அப்பாவையங்கார். யிவருக்கு அதிய வரிசை பிரசாதித் தருளி *பிரம்மமேத சமஸ்காரம்* பண்ணிவித்தருளி முழுப்படித்தனம் கொண்டருளினார் யிப்படி நடந்த இந்த முழு படித்தனத்துக்கு விரோதம் பண்ணினவன் ரெங்கத்துரோகியாய் போகக் கடவன் அனுகூலம் பண்ணினவன் ஸ்ரீ லட்சுமி பரி பூரண கடாச்ச பாக்கியஸ்தனா இருக்கக் கடவன்.

## கல்வெட்டு எண் - 2

நான்காம் திருச்சுற்றிலுள்ள வெள்ளைக் கோபுரத்தின் நுழைவாயிலின் இடதுபுறம் நிலைக்காலை ஒட்டி அமைந்துள்ள அடியவர் ஒருவர் சிற்பத்திற்கு மேலாக கிரந்தம் கலந்த தமிழிலும், இறுதியாகத் தெலுங்கிலும் வெட்டப் பெற்றுள்ளது இக்கல்வெட்டு. எழுத்தமைதி 15 ஆம் நூற்றாண்டு அமைப்பில் உள்ளது.

### கல்வெட்டு

1. சுபமஸ்த்து சௌமிய வரு தை மீ
2. உயஉ தீ வெள்ளிக் கிழமை னாள் ஸ்ரீ
3. ரங்கநாத ஸ்வாமிக்குப் படித்த
4. ரம் ஒன்றும் நடத்தாமல் மி
5. கவும் அநியாயம் பண்ணுகை யி
6. ல் பொறுக்க மாட்டாதே இந்த
7. தத் திருக் கோபுரத்திலேறி வி.ழு
8. ந்து இறந்த காலமெடுத்த அழகி
9. ய மணவாளதாசன் ஸ்ரீ காரியம்
10. பெரியாழ்வார் இவருக்கு ஸ்வாமி
11. எக்காளைகல் திருக்கோபுரப்
12. பாடு முதலான அதிக வரிசை
13. களையும் பிரசாதித் தருளி முழு
14. படித்தரத்துக்கு விரோதம் பண்
15. ணினவன் ரங்கத் துரோகியு
16. குரு துரோகியுமாய்ப் போ
17. கக் கடவன் அநுகூலம் பண்ணு
18. கிறவன் ஸ்ரீ லக்ஷ்மி பரிபூரண கடா
19. க்ஷ பாத்ர பூதனாய் வாழக் க
20. டவன் உ (தெலுங்கு பகுதி) ஸ்ரீ ரங்கநாத ஸ்வாமி கி ஆ
21. ரகிம் (புலு ஏவின்னி) நட பக அன் யாயம்சா
22. யங்கானு (குடி கோபு) ரம் மீதநுண்டி பரம

23. பாதனகு வேஞ்சேஸின ஸ்ரீகார்யம் பெரியாளு

24. வாரு ல ஈஸ்தலம் பெத்தலகுவ லெனெதி

25. ரு வத்யனம் ஸ்வாமி

26. கட்ட சேஸனு

## கல்வெட்டு எண் - 3

திருவரங்கம் இரண்டாம் திருச்சுற்று வடக்கு சுவரில் உள்ளது. எழுத்தமைதி 15 ஆம் நூற்றாண்டு. மொழி தெலுங்கு.

### கல்வெட்டு

1. பட வீட கரணிக பபரஸ கோனேரிதேவகளமக காள
2. ஹஸ்தி அரஸர ஸதா ஸேவ்யா

**கல்வெட்டு விளக்கம்**

கோனேரி தேவனின் மகனும், காளஹஸ்தி அரசனுமானவன், திருவரங்கனை எப்போதும் வணங்குவதாகக் குறிப்பிடுகிறது இக்கல்வெட்டு.

இங்கு குறிப்பிடப்பெறும் காளஹஸ்திபகுதியின் அரசனாக திகழ்ந்த மன்னன் நம் கோனேரி தேவ மகராயனின் மகனாக இருக்கலாம். இக்கல்வெட்டு 15 ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியில் திகழ்வதால் இக்கருத்து வலிமை பெறுகின்றது.